# ஆனைக்காடு

அற்புத மனிதிகளின் ஆற்றலோடு..!

**தேவ சங்கீத்**



மேழியும் மேதகு
உழத்தியும்

**மரபு மீள்-வாழ்வு முனைவோம்**

**அறக்கட்டளை**

சிறப்புடன் சீர்செய்வோம்

**வயலி நாடு • அரசவெளியீடு**

பதிப்பு : 2021 - முதற் பதிப்பு

மதிப்பு : ₹ 210

பன்னாட்டுத் தரப்புத்தக எண்- ISBN : 978-93-92271-06-9

International Standard Book Number : 978-93-92271-06-9






*"மேழியும் மேதகு உழத்தியும்"*

முன்னெடுப்பு மற்றும் வெளியீடு :

**மரபு மீள்-வாழ்வு முனைவோம் அறக்கட்டளை**

வயலி நாடு - சங்கீத் பசுமைப் பண்ணையம்,
#61/102,நாகதேவம்பாளையத்துத் தோட்டம்,
வெள்ளியங்காட்டுப்புதூர், நாகதேவம்பாளையம் கிராமம் •
கோபிச்செட்டிப்பாளையம் • பெரியார் மாவட்டம் • தமிழ் நாடு •
இந்திய ஒன்றியம் - 638 476.

அலைபேசி : +91 80123 97272
மின்னஞ்சல்: servicemmma@yahoo.com

## பெருநன்றிகள்

சிந்தியா

ஜாபர்சு டேனியல்

ஜனனி

வயலி உணவு வழிமுறையாளர்கள்

பன்முகப் பெரும்பொழுதுகள் பலவற்றில் இன்றளவும்
என் மீது ஆதிக்கம் செலுத்திக்கொண்டிருக்கின்ற
'அக்கா' என்கிற அத்தனை அதிஆளுமை
மனிதிகளுக்கும் இப்புதினத்தைச் சமர்ப்பிக்க
எந்நாளும் நான் கடமைப்பட்டுள்ளேன்.

## பதிப்புரை

மரபுகளை மறுஆக்கம் செய்யும் நோக்கம் கொண்டு ஆரம்பம் பெற்றதே மரபு மீள்-வாழ்வு முனைவோம் அறக்கட்டளை.

மரபு என்றால் மனிதி, மனிதி என்றால் மரபு என்னும் அளவிற்கு பாரம்பரிய கலாச்சாரக்கூறுகளைத் தன்னகத்தே பேணிவளர்த்து அதை அடுத்தடுத்த நூற்றாண்டுகளுக்கும் கடத்திடும் ஆற்றல் பெற்றவள்.

ஆம், பாட்டி சொல்கின்ற கதைகளின் ஊடாக பல நூற்றாண்டு கால சூழலியல் வரலாற்று நிகழ்வுகளை நிகழ்காலத்திற்கு கொணர்ந்து அதற்கு உயிரூட்டம் கொடுப்பதன் வழியாக மரபைக் கடத்துகிறாள் கிழமனிதி. .

அற்புதங்கள் கொண்ட வனவாழ்வியல், பல்லுயிர்வளம், இயற்கைச் சூழலியல் மற்றும் காலநிலை மாறுபாடுகள், மனிதிகள் உள்ளிட்ட அத்தனையோரையும் மையப்படுத்தி ஆக்கம் பெற்ற ஆனைக்காடு நூலை பதிப்பித்து வெளிடுவதில் பெருநெகிழ்வடைகிறோம்.

மரபுடன்,

மரபு மீள்-வாழ்வு முனைவோம் அறக்கட்டளை

02-08-2021

retraditionalorg@gmail.com

## நன்றியுரைப்பது நான்

இந்தப் படைப்பாக்கத்திற்குக் கருவூட்டமாய் விளங்கியவள், பெருமதிப்பிற்கு உரியவளும் உற்ற தோழியின் அடுத்த நிலையாம் உடன்பிறவா சகோதரியெனத் திகழ்கின்றவளுமாகிய சிந்தியா என்கிற அதிஆளுமையானவளுக்குப் பெருநன்றிகள்.

இத்தகு அற்புத நிகழ்விற்கு முதுமூத்த கருவாய் விளங்கி, கடலோரத்தில் ஓங்கி உயர்ந்து நின்று அகவையில் இரண்டாம் நூற்றாண்டை நெருங்கிக் கொண்டிருக்கின்ற இந்தியப் பெருநிலத்தின் ஆதிமுதற் பல்கலைக்கழகங்களில் ஒன்றான சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும், அதன் அங்கமான அரசியல் மற்றும் ஆட்சியியல் துறைக்கும் வெகுநன்றிகள்.

## முகவுரை

மனிதி வணக்கம்,

மனிதன் என்பது பொதுமை என்றெண்ணி அச்சொல்லே பரவலாகக் கையாளப்படுகின்ற நிகழ்காலத்தில் மனிதி எனும் பதத்தை பயன்படுத்த மறுக்கிறது பண்பட்ட பகுத்தறிவுச் சமூகம்.

மனிதியும் மனிதனும் ஒன்றியதே மனிதம். மனிதம் என்பதே பொதுமை. அத்தகு வல்லமைமிக்க வனச்சூழலியல் மற்றும் பல்லுயிர் வாழ்வியலைக் கொண்டாடுகின்ற மனிதிகளை முன்னெடுப்பதில் பெருமைகொள்கிறது ஆனைக்காடு.

ஆனைக்காடு என்கிற இந்த எழுத்துப்படைப்பானது முழுக்க முழுக்க பெண்ணின உயிர்வாழ்வியலை மட்டுமே மையப்படுத்தி எழுதப்பட்ட முதற்படைப்பாகும். பெண் இன மரபியல் மற்றும் பெண்பால் உயிர் வாழ்வியலை மிக்க சுதந்திரத்துடன் பேசுகின்ற இந்த நவீன யுகத்தில் இதுபோன்ற நூல் ஒன்றை வெளியிடுவது அவசியம் எனக் கருதுகிறேன்.

அவ்வாறு இந்நூல் பதிப்பித்து வெளிவரும் பட்சத்தில் உலகிலேயே பெண்ணின உயிர்களை மட்டுமே மையப்படுத்தி எழுதப்பட்ட முதல் நூல் எனும் சிறப்பு இந்நூலுக்கும், இந்த முன்னெடுப்பைத் துவங்கிய முதல் மொழி தமிழ் எனும் சிறப்பு உலக அரங்கில் நம் தாய்மொழிக்கும் கிடைக்கும் என்பது எனது பெருவிருப்பம்.

மனிதியரின் கரம்பற்றி வனம் பழகிடுவோம்!

அவள் முன்னெடுக்க நாம் பின்தொடர்வோம்!

வனவாழ்வியலுடன்

தேவ சங்கீத்

ஆடி 17, 2021 (ஆகசுட் 02)

sdevasangeeth@gmail.com

## <u>குறிப்புரை</u>

இக்கணம்முதல் உள்நுழையவிருக்கும் ஆனைக் காட்டில்  மனிதிகள் (அரசியாள் மனிதி உட்பட) அத்தனையோரையும் அவள் என்றும் அவள்கள் என்றும் உரைக்கக்கேட்போம். அவளை அவள் என்றுரைப்பதே அவளுக்கான மாண்பை வழங்கக்கூடிய மொழியாடல். தமிழ்த்தாயும் அதையே முன்மொழிகிறாள். பழந்தமிழ் இலக்கியச்சான்றுகளும் அதையே பறை சாற்றுகின்றன. தன் நூற்றாண்டு அகவையைக் கொண்டாடிய முதுமனிதியும் அதையே வழிமொழிகிறாள். அரசியாள் கோட்பாட்டும் அதையே எடுத்தியம்புகிறது.

மீண்டும் ஒருமுறை எடுத்துரைக்கிறேன் அவள் என்பது வெகுநேர்த்தியான மாண்புமிக்க பதம்.

## அத்தியாயம் - 1

## பேரரசியின் கூப்பாடு

"பேரியற்கை மற்றும் பெருஞ்சூழலியற் நியாயவழிக்கான அரசபொறுப்பாளியை பேரழிவின் விளிம்பில் நின்றுகொண்டிருக்கும் பெருமனிதி கூப்பிடுகிறாள் என்றே அரசகட்டளை சேவகி ஊடாக விரையட்டும்" இந்நிமித்தம் ஆணை பிறப்பித்தது மத்திய மலைநாட்டை ஆட்சி செய்யும் பேரரசி இளங்காடாள் பெருமனிதி.

அவ்வகையிற் அரசவைக்கு வருவதற்கு சூழலியற் பொறுப்பாளிக்கு கால அவகாசம் சரிவர அமையவில்லையெனில்,மத்திய மலைநாட்டின் அதிகாரப்பூர்வ அலுவல்கள் அத்துனையும் பெருஞ்சூழலியற் பொறுப்பாளியின் மனைக்கு மாற்றப்படுவது உத்தமம். இஃதுடன் பெருமனிதியின் அறிவிப்பு முற்றுறுகிறது.

இம்முன்மொழிதல் அனைவராலும் வழிமொழியப்பட்டு ஏற்கப்பட்டது. கடும் நெருக்கடி நிலையில் பெருஞ்சூழலியற் பொறுப்பாளியிடமிருந்து பதில் செய்தி சேவகி ஊடாய் பேரரசி பெருமனிதியை அடைகிறது.

"மத்திய மலைநாட்டின் வனவாழ்விகளுக்கும்,
குடிகளுக்கும் அக்குடிகளுக்கெல்லாம் தலையாய
குடியானவளும் பேரரசியுமாகிய காடாளுக்கு
பெருவணக்கங்கள்.

இத்தகு இக்கட்டான நேரலையில் எமது பணி நிமித்தம்
காரணமாக ஊசிமலைமேடு மற்றும் அதனைச்
சுற்றியுள்ள மலைக்கரடுகளில் தற்போது அபரிமிதமாகப்
பெருகியுள்ள கருங்கூன்வண்டுகளால் தேனீக்களின்
எண்ணிக்கை சமநிலையற்றுத் திணறும் சூழல்
உருவாகியுள்ளது.

அதுதொடர்பான கள ஆய்வு மேற்க்கொண்டு,
மேற்க்கொண்டு சமநிலையற்ற தன்மை தொடரா
வண்ணம் பேணுதல் அவசியமாகிறது.

அதுசமயம் மலைக்கு அரணாகிய 'காடளந்தி'
அரண்மனைக்கு நிகழ்காலச் சூழலில் வர இயலவில்லை
என்பதை வனவாழ்விகளுக்கும், வனவாழ்குடிகளுக்கான
கூட்டுப் பொறுப்புமிக்க அரசவைக்கு அறிவிக்க
கடமைப்பட்டுள்ளேன்".

வன ஆய்வு நடவடிக்கைகளின் போது தேனீக்களுக்காகப் பல்வேறு நலத்திட்ட உதவிகள் மேற்கொள்ளப்படுகின்றது. அத்துடன் "தேனீக்கள் நலவிரும்பிகள் சங்கம்" , "மலைச்சாரல் விரும்பிகள் சமூகம்" என்னும் சுய ஆர்வலர்கள் கூட்டமைப்பும், "தேனீக்கள் அபிவிருத்தி வாரியம்" என்னும் அரசாங்க அமைப்பும் ஏற்படுத்தப்படுகின்றது.

இவ்வமைப்புகளின் தீவிர ஈடுபாட்டின் காரணமாக பட்டுப்போன ( வறண்ட) மரக்கிளையின் இடுக்குகளில் தட்டையான மெல்லிய கற்களை சற்று இடைவெளிவிட்டு செருகி வைப்பதுண்டு. இவ்வசதியைத் தேனீக்கள் தங்களுக்கான வாழ்விடங்களாக மாற்றிக்கொண்டு 'பொந்துத்தேனீக்கள்' என்ற சிறப்பு வட்டார மொழியுடன் மத்திய மலைநாட்டின் கரடுகளை அங்குல அங்குலமாய் அளந்து வைத்துள்ளன.

அதுபோலவே பாறை இடுக்களிலும், கல் அடுக்குகளிலும் இவ்வசதி செய்யப்பட்டு தேனீக்களின் சமநிலை பேணப்படுதல் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இவ்விடயம் சரிசெய்யப்பட்டு வருகின்ற நல்வேளையில் மற்றுமோர் விபரீதநிகழ்வு அரங்கேற்றம் காண்கிறது.

இனிப்புச் சுவைக்கு இனிய அடிமைகளான தேனீக்கள் மதுவிற்கும் சேர்த்தே அடிமைகள்தான். இடுக்குப் பனைகளிலும், ஈச்சம் பனைகளிலும் மரமேர்மனிதிகள் (மரமேறிகள்) செம்மண்ணால் குயவச்சியின் உள்ளங்கைச் சுவடுகள் பதிய கலைவண்ணம் பொருந்தச் செய்யப்பெற்ற மட்பாண்டங்களை பனைமர உச்சியில் அதன் பாளைகளைச் செதுக்கி அதன் மீது பானைகளைக் கவிழ்த்து மூடிவிடுவது வழக்கமான ஒன்று.

இப்பாளைகளைச் சீவுவதற்காக கூர்மை ஏந்திய கொடுவாய் (கத்தி) போன்ற கற்களைப் பயன்படுத்துகிறாள்கள் மரமேறுகின்ற மனிதிகள்.

மறுநாள் விடியற்பொழுதில் அந்தப் பானையின் கழுத்துப் பகுதி வரையிலும் பனைப்பதநீர் நிரம்பி நிற்கும். அதன் மணத்திற்கும் சுவைக்கும் மயங்கி தேனீக்கள் தெளுவு முட்டிகளை (பதனீர்ப் பானை) மொய்ப்பதால் மாமதுவின் மயக்கத்தில் கிறங்கி பானைசூழ் பதநீர்க்கடலில் மாய்ந்து விடுகின்றன. ஒன்றோ இரண்டோ அல்ல பல நூற்றுக்கணக்கில் பானைகளும், பல்லாயிரக்கணக்கில் தேனீக்களும் இந்நிகழ்வில் பங்குகொள்கின்றன.

சுண்ணாம்பு இட்டது தெளுவு எனில் சுண்ணாம்பு தவிர்த்தது மயக்கம்தரும் இயற்கை பானம் கள் என்கிறாள்கள் உண்பவள்கள்.

பனைமரத்துக் குலைகளை காக்கும் பன்னாடை (பன்னுடை) கொண்டு முடிதல் அவசியம் என்ற அரசாங்கச் சட்டமும் இக்கணம் முதலே அமலுக்கு வருகின்றது.

அதனைச் செம்மையாய்ச் செயல்படுத்த அரசாங்க அலுவல்காரிகளும் அவ்விதம் களப்பணிக்கு விரைகிறாள்கள்.

அடுத்த சில நாழிகைக்குள், இந்நிகழ்வுகளும் அதற்கென அரசாங்கம் மேற்க்கொண்ட சிறப்பு அதிவிரைவு நடவடிக்கைகள் குறித்தும் விரிவான அறிக்கை சேமை இலையில் திருகுகள்ளியின் பழச்சாற்றைக் கொண்டு காடாளும் மரகதப்புறா தனது பரிணாம வளர்ச்சியின் காரணமாக இயற்கையாய் உதிர்த்த இறகுகளால் எழுதப்படுகின்றது.

அவ்வெழுத்துக்கள் அழியா வண்ணம் அதன் மேல் சோற்றுக்கற்றாழைச் சாற்றைக் கொண்டு படலம் ஒன்று ஏற்படுத்தப்படுகிறது.

அரச பொறுப்பாளியின் இவ்வறிக்கை, உடனடி விடியற்பொழுதில், 'காடளந்தி' அரண்மனையின் முகப்பில் அனைத்து இனக்குழுக்களைச் சேர்ந்த குடிகள்

முன்பாகவும் வாசிக்கப்பெற்று அதன் நகல்கள் வனங்களின் பெரும்பாறைகளிலும் , குடிகள் அதிகம் கூடும் இடங்களிலும், பெருமரக்கிளைகளிலும் வனவாழ்விகள் அனைவருக்கும் தெரியப்படுத்தும் வகையில் காட்சிவடிவம் கொடுக்கப்பெறுகிறது.

அனைத்துக் குடிகளின் கருத்துக்களும் கேட்கப்பெற்று அரசியாள் பெருமனிதியின் முன்னிலையில் ஆலோசனைக்கு உட்படுத்தப்பட்டு அதன் பின்னர் செயற்பாட்டுவடிவம் எட்ட வேண்டும் என்பது மத்திய மலைநாட்டின் கட்டுப்பாடுகளுள் ஒன்று.

இதுதவிர்த்து இன்னுமோர் கட்டுப்பாடும் உண்டு. எல்லாவகையின ஆண்பால் உயிரிகளும் புணர்தல் இன்பத்தேவைக்காக மட்டுமே நாட்டிற்குள் நுழைய அனுமதி வழங்கப்படும். அதுவும் அவளவரால் குறிப்பிடப்படும் சில திங்கள் மட்டுமே அனுமதி கிட்டும்.

தவிர்க்க இயலா சூழ்நிலைகளில் மட்டுமே இத்தகைய 'ஆண் இருப்பு அனுமதி' நீட்டிக்கப்படும்.

ஆண்மரங்களின் மரகதங்கள் மட்டுமே காற்றின் ஊடாகவும், முதல்வித்தேனீக்களின் (அரசித்தேனீ = ராணித்தேனீ) கட்டளைகளுக்குக் கட்டுப்படும் பணித்தேனீக்கள் ஊடாகவும் நாட்டிற்குள் கடத்தப்பட்டு இயற்கைத் தன்மை பேணப்படுவது அம்மலையின் மரபு.

## அத்தியாயம் - 2

## சமர் முன்னெடுப்பு

மஞ்சள் வனவாழி என்றியற்பெயர் கொண்ட ஆளுமையொருவள் சேனைமுதலியாய் நியாயவழியேற்று செவ்வனே வழிநடத்துகிறாள், சேனையை.

குல்லாய் பெண்வீரர்கள் மேற்கு மத்திய மலைநாட்டுக் காடுகளை வாழ்விடமாய்க் கொண்ட பூர்வ குடிகள். இவள்கள் ஓரிட வாழ்விகளாய் இருந்து பிறகு

பல்இடவாழ்விகளாய் பரிணாம வளர்ச்சி
பெற்றுள்ளாள்கள். முதுகு நாணி இனத்தைச்
சேர்ந்தவர்களாகக் கருதப்படும்

செம்முகப்பெண்கள் அடுத்த படையினை ஏற்று
முன்னெடுக்கும் வீரர்கள் ஆவர்.

செம்மயிற் கொன்றை மரங்கள் அவர்களின்
விருப்பமான வாழிடம் மற்றும் அவள்களுக்கு மலர்கள்
விருப்பமான உணவு.

குல்லாய் பெண்வீரர்கள் தங்களுக்கென தனித்தன்மை மிக்க மிகவும் பரவலான சைகைகள் மற்றும் நடத்தைகளை கையாள்கின்றனர்.

அ...ஆ சொல்லும் முறையில் வாயைத் திறந்து உதடுகளைக் குவித்து நாக்கை உள்ளிழுத்து கோரைப் பற்களால் வெளிச்சத்தை முத்தமிட்டு ஒலிக்குறிகளை வெளிக்கொடுக்கும் வல்லமை பெற்றவர்கள் குல்லாய் பெண்வீரர்கள். அத்தகைய சிறப்பு ஒலிக்குறிகள் அதிபயங்கர சந்திப்புகளில் போது இணை ஆளுமைகளுக்கு தனது உணர்வுகளை எளிதில் கடத்திவிடுகின்றன. அத்தோடுஅவள்களின் ஆதரவு அல்லது எதிர்ப்பை சமகாலத்தில் வெளிப்படுத்தும் நிகழ்வும் நிகழ்ந்தேறுகிறது.

குல்லாய் பெண்வீரர்கள் எப்பொழுதும் ஒரு நேர்கோட்டு ஆளுமையின் வழிமுறையைக் பகிர்ந்து பின்பற்றுவாள்கள். அக்காரணங்கருதியே குல்லாய்ப் படையை முதலில் முன்னெடுக்கப் பணிக்கிறாள் சேனை முதலி.

வல்ல மலைநாட்டிற்கும் மத்திய மலைநாட்டிற்கும் இடையில் போர்மூலும் சூழல் உருவாகியுள்ளது.

**அத்தியாயம் - 3**

**காக்கப்படவேண்டிய கானாங்கோழிகள்**

இருநாட்டுப் போருக்குமான தலையாய காரணம் யாதெனில் மத்திய மலை நாட்டின் தேசியப் பறவை இனங்களில் ஒன்றான கானாங்கோழிகள் பருவநிலை மாறுதல்களுக்கு ஏற்ப வல்லமலை நாட்டுத் தொடர்களுக்கு இடம்பெயர்தல் ஒவ்வொரு பருவத்திலும் நிகழ்கிறது.

இத்தகு சூழ்நிலைகளில் அவை அங்கு நீர்நிலைகளில் தங்கி கூடுகட்டி தங்கள் இனத்தவர்களின் எண்ணிக்கையைப் பெருக்கிக் கொள்வதுண்டு.

இயற்கைச் சீர்நிலைகளை உணராத சில வல்லநாட்டு வேட்டைக்குடிகள் அவற்றின் முட்டைகள், குஞ்சுகள் உட்பட தாய்க் கானாங்கோழிகளையும் வேட்டையாடி உண்கின்றாள்கள்  என்ற தகவல் அரச தலைமை ஆட்சியாளர் பேரரசி இளங்காடாள் பெருமனிதியை அடைகிறது.

அரசாங்க ஒற்றர் சேவை செய்யும் சில மனிதிகளை அந்நாட்டிற்கு அனுப்பி அம்மனிதிகள் ஊடாக அந்நிகழ்வை உறுதி செய்தாள் பேரரசி இளங்காடாள்.

மத்திய மலைநாட்டின் ஓலையானது அரச முத்திரையுடன் பேரரசி இளங்காடாள் பெருமனிதி சார்பாக வல்ல மலைநாட்டு அரசி பெருவனக்காப்பாளி மகள் முதுவனக்காப்பாளிக்கு அனுப்பப்பட்டது.

"பெருமதிப்பிற்குரிய மேன்மை மிக்க வல்லமை பொருந்திய வல்ல மலைநாட்டுக்கும், சிறப்புமிக்க சீரான செங்கோல் ஆளுமையாய் ஆட்சிசெய்யும் அரசியார் முதுவனக்காப்பாளி அவளுக்கும் எமது பெருவணக்கங்கள்.

மத்திய மலைநாட்டின் பாதுகாக்கப்பட்ட பறவை இனமாக அறிவிக்கப்பட்டு, எம் நாட்டுவாழ் பல்வித பூர்வகுடி இனக்குழுக்களைச் சேர்ந்த மனிதிகளுக்கு எவ்வித இடையூறு ஏற்படினும் இணைக்குரல் எழுப்பி எதிரிகளை எதிர்கொள்ளும் பெருந்துணிவு மிக்க 'கானாங்கோழி' பறவை இனங்கள் தங்கள் நாட்டுவேட்டைக்குழுக்களால் அழிவிற்கு உட்படுத்தப்படுகின்றன எனும் சேதி எமக்கும் எம் நாட்டுவாழ் பெருமனிதிகளுக்கும் மிக்க வேதனையளிக்கிறது.

ஆகவே, இது குறித்த அதிவிரைவு நடவடிக்கைகளை மேற்க்கொண்டு அவற்றின் பாதுகாப்பை உறுதி செய்திட வேண்டுமென்று எம் குடிகளின் பிரதிநிதியாக, அரசிக்கான கூட்டுப் பொறுப்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

பெருநன்றிகள் அரசியார்க்கு.

அரச ஓலையின் விளைவாக எவ்விதப் பயனும் விளையவில்லை என்பதை அறிந்து அடுத்தகட்ட 'அரசியாள் கோட்பாடு'களின் வழிமுறைகளைப் பின்பற்றி போர் அறிவிப்பு செய்யப்பட்டு போருக்கான முன்னேற்பாடுகள் இருநாடுகளிலும் துவக்கம் பெற்றது.

யுத்தகள ஏற்பாட்டின் ஒரு பகுதியாய் நேர்கோட்டு ஆளுமையின் வழிநடக்கும் குல்லாய் பெண்வீராள்கள் துருப்புக்களை முன்னெடுக்க வேண்டுமென சேனைமுதலியாகிய மஞ்சள் வனவாழி எனும் இயற்பெயரேந்திய நான் தங்களைப் பணிக்கிறேன்.

தங்களின் உத்தரவே எங்களின் உத்வேகம். அவ்விதமே படை முன்னெடுப்புகள் ஆரம்பம் பெறட்டும் என்றாள் குல்லாய் குலமகள்.

இருநாட்டு இணைப்படைகளும் கம்பத்ராயன் மலையை ஒட்டிய 'கரடிக்கோம்பு' எனும் காட்டாற்றங்கரையில் ஒன்றையொன்று எதிர்கொள்ளுமென சேனை முதலிகள் இருவரும் மனத்திட்டம் கொள்கின்றாள்கள்.

மத்திய மலைநாட்டுப் படையின் அணிவகுப்பு ஆரம்பம் பெற்றுக் கொண்டிருக்கிறது. அத்தனை படைகளின் வீரப்பெருமனிதிகளும் விரைந்து ஆயத்தமாகிக் கொண்டிருக்கிறாள்கள்.

படையின் முதல்நிலையினை குல்லாய் பெண்வீரர்கள் முன்னெடுக்க, செம்முக வீரப்பெண்கள் அடுத்த நிலையில் அணிவகுக்க, மூன்றாம் நிலையில் வீரப்பெருமனிதிகளின் வில்அம்புப் படை விரைகிறது. அதைத் தொடர்ந்து வனவாழி இனக்குழுக்களின் ஈட்டிப் படையும், ஐந்தாம் நிலையில் அமைதிப் படையும் அடுத்தடுத்து அணிவகுப்பில் அங்கம் கொள்கின்றனர்.

போரின் பல வெவ்வேறு நிலைகளில் பங்கு கொள்ளும் வீரப்பெருமனிதிகள் ஒவ்வொருவளும் வெறும் போர்கலைத்திறன் பெற்றவள்கள் மட்டுமன்று. உணவியற்கலை முதற்கொண்டு உச்சபட்ச உடலியற்கூறு மருத்துவம் வரை பல்வித வாழ்வியல்சார் அறிவுத்திறன் பெற்றவள்கள் அப்பெருமனிதிகள்.

வில்அம்புப் படையின் வீரமனிதிகள் ஆனவள்கள் வில்லாடிகள் என்பதைத் தாண்டிய பெருமனத்திட்பம் கொண்ட மனிதிகள் என்பதற்கோர் நற்சான்றொன்றை முன்மொழிதல் அவசியமிங்கு.

வீரமனிதிகட்கு அவள்களின் இளம்பருவம் முதலே

போர்ப் பயிற்சிகள் வழங்கப்பெறுவது குடிவழக்கம்.
அவள்கள்தம் வளரிளம் பருவத்துப்
பேரிளம்பெண்ணாய்ப் பூப்பெய்தியதும்
அம்மனிதிகளின் ஒப்பற்ற எழிலுக்கு ஒய்யாரம் சேர்க்கும்
மார்பகங்களில் ஒன்றை இழத்தல் என்பது ஈடுசெய்ய
இயலாச்செயல்.

வில்லாடி என்பவள் வில்-அம்புப் பயிற்சி மேற்கொள்ளும்
வேளைகளில் இலக்கைக் குறிவைத்து இழுத்து அம்பு
எய்தும் பொருட்டு அம்மனிதிகளின் இடப்பக்க மார்பு
அவள்களுக்கு இடையூறாக இருப்பதை உணர்ந்து,
அதனை கொய்து எறிந்த பெரும்
போற்றுதலுக்குரியவள்கள்.

மனமும் முகமும் அவள் வீரப்பெருமனிதி எனும்
மாண்பை அடைந்து விட்டாள் என்றே இன்முகம்
கொண்டு திளைக்கிறது. அசாதாரண நிலையிலும்

அபரிமிதமான உணர்ச்சிக் கட்டுப்பாடு அவசியம்
வேண்டியதாகிறது என்பதை உணர்த்தி நிற்கிறாள்
அம்மனிதி பெருமனிதியாய்.

சலனமில்லா சஞ்சலத் திமிர் கொண்டு உயர்நோக்கேந்தி
சற்றே உயர்வாய் முன்நிற்கும் இணைமுகடுகள்
இரண்டில் ஒன்றன் மீது நெருப்புஇடி நேரே பாய்ந்து
கருகியது போல், அத்தகைய மாண்புமிக்க மார்பகத்தைக்
குருதி வழிந்தோடப் பிளந்தெறிந்த கூர்முனை கொண்ட
போர்வாளும் அது அரிந்த வலியறிந்து பன்மடங்கு
அதிர்வுடன் துடிக்கிறது துடியாய்.

அவளிடத்தில், இப்பொதுவின்மை நிலையிலும்
பொங்கிவரும் உணர்ச்சிக்குத் துளியளவும் ஆட்படாது
அரியணையேறுகிறது அவளின் வீரமனம்.

சொட்டும் செங்குருதி பட்டதும் பூமித்தாயின்
புனிதப்புறப்பரப்பும் நடுக்குற்றுப் புலுங்குகிறது.

அம்மனிதி அச்சமற்று வீர அலங்காரம் பூணுகிறாள்.

அவளுடன் அறிந்த உள்ளத்தையும் அவ்விதமே பேணுகிறாள்.

## அத்தியாயம் - 4

## காட்டுப்பறை முழங்கும் காடளந்தி அரண்மனை

மத்திய மலைநாடென்பது  இலுப்பை மரங்கள் சூழப்பெற்ற குளிர்க்கூடாரம் வேய்ந்த அடர்காடு.

இலுப்பை மரமே மத்திய மலைநாட்டின் அனைத்து வித நம்பிக்கையின் அடையாளம். போரிற்குச் செல்லும் வீரமனிதிகள் அனைவரும் இலுப்பம்பூவை இலையுடன் சேர்த்துக் காய்ந்த கற்றாழை நாரில் கட்டிய மாலையைச் சூடுவர்.

இறந்த காட்டுப்பன்றியின் கடினமான தோலினால் செய்யப்பட்ட 'காட்டுப்பறை' காடளந்தி அரண்மனையின் உச்ச அச்சாரத்தில் முழங்கி, போர்த்துருப்புகள் அனைத்தும் முன்னெடுக்கப்படலாம் என்பதையே உணர்த்துகிறது. அடுத்த கணத்திலிருந்து சேனைமுதலி சேனையின் முழுப் பொறுப்பையும் ஏற்கிறாள்.

படை முன்னெடுப்புகள் ஆரம்பம் பெறும்முன், பேரரசியின் வாழ்த்தும் வனவாழ்விகளின் வழிகாட்டுதலுடனும் சேனைத் துருப்புக்கள் நகர்வு பெறுகின்றன.

காட்டாறு பூமித்தாயின் மீது பற்றிப்பாய்ந்து ஏற்படுத்திய காட்டாற்றங்கரையின் மீது படை நகர்வுகள் இடம்பெறுகின்றன.

உலர்ந்த சுரைக்காயின் கழுத்தானது மலைநாட்டில் காணக்கிடக்கும் கருஞ்சாரைப் பாம்பினது தோலால் இறுக்கப்பட்டு அக்குடுவையில் காட்டுச்சுனை நீர் இறைக்கப்பட்டு வீரமனிதிகளின் மெல்லிய இடையில் கோர்க்கப்படுவதென்பது போர்மரபின் அடிக்கூறு. அவ்விதம்

நெடுந்தொலைவுப் பெரும் பயணத்தின் தேவைப்பாடுகள் மெய்ப்பிக்கப்படுகின்றது.

மலைநாட்டு குடியாள்பவள்கள் எவரும் தங்களுக்குள் போரிடும்போது ஆனைப்படைகளைப் பயன்படுத்துவது கிடையாது. பேரரசு நாடுகளை எதிர்த்து நிற்பதற்கு மட்டுமே அவள்கள் ஆனைகளை படையில் பயன்படுத்துகிறாள்கள்.

இவ்வீரமனிதிகள் பல மாதங்கள் போர் செய்யும் சூழல் ஏற்பட்டாலும் உணவுக்காக எதையும் உடன் எடுத்துச் செல்லும் வழக்கம் துளியும் அற்றவள்கள்.

அவ்விடம் பேரியற்கை வீரப்பெருமனிதிகளுக்கு வேண்டியவற்றைப் பெருந்தன்மையுடன் வழங்குகிறது. எந்தெந்த உணவுகள் எவ்வெவ்விடங்களில் எத்தகைய பருவச் சூழல்களில் கிடைக்கும் என்பது அத்தனை மனிதிகளுக்கும் அத்துப்படி.

காட்டாற்றங்கரையில் ஏறத்தாழ இருபது வழித்தடக்கற்களைக் கடந்தால் ஆனைச்சுனை வரும். ஆனைச்சுனை என்பது ஆனைகள் நீர் அருந்தும் சுனை எனும் காரணப்பெயர் என்றளவில் மட்டுமின்றி அதனுள்ளும் பல விடயங்கள் உள்ளத்தைத் தழுவிக்கொண்டிருக்கின்றது.

நிலம் முழுதும் விரவிக் கிடந்த இப்பல்லுயிர்க்கூட்டம் இச்சூழலில் எஞ்சியிருப்பது இவ்விடம் மட்டுமே என்பதை உணர்த்தும் இடமே ஆனைச்சுனை.

பலநூறு நிகற்பம் அளவு பல்வகை புத்துயிர்களைக் கருப்பையில் ஏந்திய பொழுதிலும் முன்னே ஈன்றெடுத்த பல்வகை உயிர்கட்கு, மலைமார்பின் ஊடே ரத்தத்தைத் தேனாக்கி அத்தேனைச் சுவையாக்கி அச்சுவையைச் சுளையாக்கி அச்சுளையை மண்ணுக்கடியில் மறைத்துப் பெரிதாக்கி பழுத்தவுடன் மணம் பரப்பி மலைவாழ்விகளை எடுத்தருந்த அழைக்கிறாள், வனத்தாய்மகள்.

அவ்விதமே அவ்வழைப்பை ஏற்று காட்டானைகள் அனைவரும் அணிவகுத்துக் கிளம்புகின்றனர். இரவிலும் இவ்விடம் ஆனைகளின் அலைதிரள் கூட்டத்தால் சூழப்பெறும். இக்காரணமே 'ஆனைச்சுனை ' என்பதன் மெய்மை.

வல்ல மலை நாட்டின் வரியற்ற கழுதைகளின்
வலிமையினை கூடுதலாய் மெய்ப்பிக்கும் பொருட்டு,
தலமலை நாட்டிடம் இரவல் பெற்ற காட்டெருமைப் படை
மத்தியில் செல்ல , அதனையடுத்து வீரமனிதிகளின்
துருப்புகள் பின்விரைகின்றன.

வல்ல மலை நாட்டின் குடியாள்பவள்
பெருவனக்காப்பாளி மகள் முதுவனக்காப்பாளி.

மத்திய மலைநாட்டுப் படையானது, வல்ல மலை நாட்டின் படையை 'வனங்கொத்திக்காடு' என்னுமிடத்தில் இடைமறிக்கிறது. அக்கணமே யுத்தம்.

நீரூற்றுக் காடாளியின் முற்பத்திரண்டாம் மகள் அதாவது செம்மரவாழிக்கு முன்னவளும் கிளிமுகத்தாளுக்குப் பின்னவளுமாகிய மலைவேள் அரையாள் எனும் அதிஆளுமை ஆனவள் அரச சேனையை செவ்வனே வழிநடத்துகிறாள், சேனை முதலியாய்.

குல்லாய் பெண்வீரர்கள் எதிர் நாட்டுப் படையின், முன்னெடுப்பாக வலிமை மிக்க கழுதைப் படையினைக் கண்டவுடன் தலை குனிந்து கொள்கிறார்கள். அதனை சுதாரிக்கும் முன்பு மஞ்சள் வனவாழியின் தலைமை ஏந்திய மத்தியப் படையின் வீரப்பெருமனிதிகள் எய்திய அம்புகளின் நுனியானது செம்முகப் பெண்வீரர்களின் கூந்தலைக் கோதிச்செல்கிறது. அந்த அம்புகள் வரிகள் அற்ற கழுதைகளைத் தாக்குகின்றன.

அது உணர்ந்த பொழுதே தலமலையின் இரவல் காட்டெருமைகள் முந்திக்குதித்து முன்னேற, அம்புகளின் கூர்நுனிகள் அவற்றின் கடினமான தோல்களினால் உள்நுழைவு அனுமதி மறுக்கப்பட்டு உராய்ந்து தரையில் மாய்கின்றன.

மறுகணமே மத்திய வனவாழி இனக்குழுக்களின் வலிமையறிந்த இரவற் படைகள் சற்று நிதானிக்கின்றன. சமநேரத்தில்  சுதாரித்துக் கொண்ட வல்ல நாட்டுக் காடாளிகள், கடமானின் நெடுங்கொம்பினால் நெருக்கப்பட்ட போர்க்காப்புடன் முன்னெடுக்கிறாள்கள்.

இருநாட்டுப் படைகளும் இணையென இந்நாள் போர்நிறுத்தம் பெறுகின்றது.

வீரமனிதிகளின் போர்மொழிகளே படை முன்னெடுப்பின் முன்னோட்டம்.

மலைவேள் அரையாளுக்கு இணையானவள் இளவேள் அரையாள். மறுநாள் யுத்தகளத்தை வழியேற்று நடத்த வேண்டுமென வல்ல மலைநாட்டு சேனை முதலி இளவேள் அரையாளைப் பணிக்கிறாள்.

சேனை முதலியின் மொழியை ஏற்று வழிநடப்பதாய் அம்மனிதியும் ஏற்புரை வழங்குகிறாள்.

அந்தச் சாமம் முழுதும் இளவேள்அரையாள் சேனையின் ஆயத்த நிலையை உறுதி செய்கிறாள்.

"சிந்தையும் சினமும் ஒருசேர இரண்டும் சந்தை செல்லும் சாரத்துவண்டியில் பூட்டிய கடம்பூர் மலைப்பசுக்கள் போல் சீறிப்பாய்ந்து சேனையின் உத்வேகத்தை வீரப்பெருமனிதிகள் ஒவ்வொருவளும் உறுதி செய்திடல் வேண்டும்"  என்பது அரையாளின் கூற்றாணை.

மஞ்சள் வனவாழியின் படைகள் போரின் துவக்க நிலையில் சற்று தாழ்நிலத்திலும், வேள்அரையாளின் சேனை உயர்வான புவியியல் ரீதியிலான வலிமையையும் பெற்றதாய் ஒன்றையொன்று எதிர்கொள்ள மறுநாள் யுத்த நிகழ்வுகள் அரங்கேறுகின்றன.

போரின் துவக்க நிலையில் இதனை அறியாதவளாய் துருப்புக்களை முன்னெடுக்கிறாள் இளவனவாழி. வெகுசில எதிர்வினைகளின் பெரும்பலனாய் நிலப்பரப்பு சார்ந்த பாதகங்களையும் அதனூடாக போரின் வெற்றி தோல்விகள் பரிமாறப்படலாம் என்பதை வலிமையாக நம்புகிறாள்.

இத்தகவல் நிதானம் மிக்க வீரப்பெருமனிதியொருவள் ஊடாக சேனை முதலி மஞ்சள் வனவாழிக்குத் தெரிவிக்கப்படுகிறது.

"எம் சேனை முதலிக்கு வணக்கங்கள், நிலவியல் அமைப்புசார் பாதங்கள் நமக்கு இருப்பதாய் நம் படையின் முன்னெடுப்பாளர் இளவனவாழி உணர்கிறாள். இவ்விடயம் குறித்து தங்களுக்குத் தெரிவிப்பதே எமக்கு வழங்கப்பட்ட அரச சேவை" என்கிறாள் சேவகி.

ஆம், அவ்விதம் நானும் சற்று முன்னரே அறிவேன் என்னும் மொழி சேனை முதலியினுடையது. வியப்புடன் பார்க்கின்றாள், சேனையின் சேவகி.

பின்வாங்குதல் என்பது சேனைக்கும், சேனை முதலிக்கும் ஏன் நம் அரசிக்கும் தரக்குறைவு பிம்பத்தை ஏற்படுத்தும். குடிகளின் மத்தியில் மத்திய மலைநாட்டின் வீரமனிதிகள் பின்வாங்குகிறாள்கள் என்றெண்ணம் மேலோங்கும். ஆகவே, பின்செல்வதென்பது இப்பொழுது நிகழா. போர் நடவடிக்கைகள் இந்நிலையிலேயே தொடரலாம் என்றாள் சேனை முதலியாள் மஞ்சள் வனவாழி.

சேனை முதலியின் இக்கட்டளை சேவகி ஊடாய் மத்திய மலைநாட்டு சேனையின் தற்போதைய முன்னெடுப்பாளியான இளவனவாழிக்கு இடப்பெயர்வு செய்யப்படுகிறது.

இரு சேனைகளும் சமதளப் பகுதியில் எதிர்கொள்ளாமல் ஒன்று உயர்நிலத்திலும், மற்றொரு படை தாழ்நிலப் பரப்பிலும் ஒன்றையொன்று எதிர்கொள்வது நிச்சயம் பெரும்போர் விளைவுகளை ஏற்படுத்தும் சேவகி. எம்மைக் காட்டிலும் மிகுந்த அனுபவம் கொண்ட தங்களுக்கே இது தெரியும் தானே.

அஃது சரியெனினும் சேனை முதலியின் ஆணையை மீறும் அதிகாரம் எமக்குக் கிடையாது.

நாம் எய்தும் அம்பு கீழிருந்து வானவில் போல் மேல் வளைந்து எதிரிநாட்டு படைகளை எதிர்கொள்வதற்கும் உயர் நிலத்திலிருந்து பூமியின் ஈர்ப்புவிசை அம்புகளைத் தன்னை நோக்கி ஈர்ப்பதற்கும் மலை அளவிலான வேற்றுமைகள் உண்டு என்பதை நாம் உணர்வோம் இது மத்திய மலைநாட்டு சேனை முன்னெடுப்பாளியின் மொழி.

எக்கணமும் பெருநம்பிக்கையுடன் படையை முன்னெடுப்பது நம் கடமையன்றோ. ஏகப்பட்ட வேற்றுமைகள் இருப்பினும் முன்னெடுப்புகள் முடுக்கிவிடப்படட்டும்.

வீரப்பெருமனிதிகளின் பாத உராய்வுகள் மலைத்தாயின் உடலில் பெருத்த அதிர்வலைகளை ஏற்படுத்துகின்றன.

அத்தகு வல்லமை பொருந்தியவர்களே பெருமனிதிகள்.

காட்டாற்றை கண்ணாடியாய் மாற்றும் கதிரவனின் ஒளியைப் போல் மிளிரும் உடையும், உதிக்கும் உரிச்சொற்களும் வீரமனிதிகளை வீரப்பெருமனிதிகளாய் மாற்றியதென்றால் மிகையாகா.

பேரரசி இளங்காடாள் பெருமனிதியின் கருத்தைப் பலப்படுத்தி அவரது காலத்தில் போர் வென்றெடுக்கப்பட வேண்டுமென வனங்கொத்திக்காடு போரில் பங்கு கொள்ளும் பெருமனிதிகளாகிய ஒவ்வொருவரும் வீரகாவியம் படைப்போம் என்பது யுத்த முழக்கமாக ஒலிக்கின்றது.

வனமனிதிகளின் கணநேர அசைவுகளும் பேரரசிக்கு இணையானவை என்பதைக் கடந்து பேரரசியின் நகர்வுகளுக்கு சவால் விடுவதாய் அமைகின்றன.

பேரரசி இளங்காடாள் ஆனவள் தமக்குக் கீழ்நிலையில் உள்ள குடிகளை வழிநடத்தவில்லை. தமக்கு இணையான நிலையில் உள்ள குடிகளை வழிநடத்தும் அற்புத ஆளுமை ஏந்தியவள். மனிதிகள் ஒவ்வொருவளும் பேரரசியாய் அரசை வழிநடத்தும் பேராற்றல் பெற்றவள்கள். இருபுறமும் பெரும்புரிதல் தேவைப்படும் இக்காலகட்டத்தில், பேரரசியின் ஆட்சியை ஏற்று வழிநடக்கும் குடிகளாகிய இவ்வவள்கள் மெய்மையில் பெருமனிதிகள் தான்.

அத்தகைய தனக்கு இணையான குடிமக்களை அரவணைத்து தமது ஆட்சியை அன்புமிக்க அறவழியில் செலுத்துவது அப்பேரரசி காடாள் பெருமனிதியின் பெரும் பக்குவத்துக்கு சான்று பகர்கின்றது.

மேட்டுப்பாங்கான பகுதியில் நின்று பள்ளத்து வீரமனிதிகளை பலியிடுவது வல்ல மலைநாட்டுத் தரையர் இனக்குழுக்களுக்கு அவ்வளவு கடினத்தைக் கொடுக்கவில்லை.

மத்தியப் படையின் சத்திய எண்ணிக்கை பொழுதிற்குப் பொழுது சரிகிறது.

மலைவேள் அரையாளை சேனை முதலியாய் ஏற்ற வல்ல நாட்டுப் படையும், தலமலை நாட்டு இரவற் படையும் இணைந்த இப்போரில் மணிக்கு மரத்தின் நிழல் மேற்கிருந்து கிழக்கு வர போர் வெற்றியும் மேற்கு நிற்கும் மத்திய வனவாழி இனக்குழுக்களிடமிருந்து வல்ல மலைநாட்டுத்தரையர் இனக்குழுக்களின் பக்கம் சாய்ந்து கொண்டிருக்கிறது.

வனவாழிப் பெருமனிதிகள் பெரும் எண்ணிக்கையில் வீரச்சாவை நோக்கி வீரநடைபோட்டு நகர்வு பெற்றுக்கொண்டிருக்கிறாள்கள்.

வைத்தியச் செவிலி பச்சாளியும் அவளின் உதவிச் செவிலி கொன்றையாளும் திணறுகிறாள்கள் யுத்தக் களத்தில் காயமடைந்தோரின் குவியல் கண்டு.

இறுதியில் மத்திய மலைநாட்டு வனவாழிக்குழுக்களின் வீரப்பெருமனிதிகளின் அபாரமான வில்அம்புத் தாக்குதலுக்குப் பிறகு வெற்றி வாய்ப்பை இழக்க நேரிடுகிறது. எனினும் யுத்தக்களத்தை முத்தமிட்டு வீரச்சாவு எய்தினர் வீரப்பெருமனிதிகள்.

போர்வெற்றியின் பலனாக வல்ல மலைநாட்டுத் தரையர்களுக்கு மத்திய மலைநாட்டின் சில ஊர்கள் வழங்கப்படுகின்றது.

தரையர்களுக்கும், வனவாழி இனக்குழுக்களுக்கும் இடையில் ஏற்பட்ட போரில் தரையர்கள் வெற்றி மாலை சூடியதன் விளைவாக மத்திய மலைநாட்டில் கைப்பற்றப்பட்ட ஊர்களில் தரையர் இனக்குழுக்களைச் சேர்ந்தவர்களும் குடியேறினர்.

மலைநாட்டு குடிகளில் பல்வகைப்பட்ட இனக்குழுக்கள் இருக்கின்றனர். அவரவர்கள் தத்தம் குடிவழக்கப்படி பாரம்பரிய மரபுமிக்க தற்சார்பு வாழ்வியல் முறைகளை மேற்க்கொண்டுவருகிறார்கள். வனத்தில் வாழ்வியலை மேற்க்கொள்ளும் எவரும் எவரையும் எவ்விதத்திலும் நிலைகுறைவாய் நடத்துவதில்லை.

**அத்தியாயம் - 5**

**வனமனிதிகளின் வாழ்வியற்கலை**

அம்மனிதிகளின் பிரத்தியேக வாழ்வியற் கூறுகளாக ஈசல் பிடிப்பதில் துவங்கி முயல்களுக்கு கன்னி வைப்பது , மரகதப்புறாவிற்கு வலை விரிப்பது, சர்க்கரைவள்ளிக் கிழங்கை அகழ்ந்து எடுப்பது, கடுக்காய் பறிப்பது, பாறைத்தேன் எடுப்பது என்னும் வகையில் ஏகப்பட்ட வனம் சார்ந்த இயற்கை வளங்களை எவ்வகையிலும் பாதிக்காத தற்சார்புக் கலாச்சார நடவடிக்கைகளை மேற்க்கொள்கிறார்கள்.

முன்பனிக்காலங்களில் பெருமழையும், கடும் பனியும் ஒன்றையொன்று சற்றும் சளைக்காமல் பல்லுயிர்கள் பலவற்றையும் தாக்குவது வழக்கமான நிகழ்வு.

அவ்விதமான சூழலியல் நிகழ்வுகளின் போது மழைத்தண்ணீர் தரையில் மோதி விழுந்து ஊறி வனத்தாயின் கருவறைக்குள் நுழைந்து பூமியை இலகவைப்பதால் மேற்பரப்பு மண்ணும் இறுக்கத்தை இழக்கிறது.

இதன் காரணமாக செவ்வெறும்புகளும் இறகு முளைத்த செங்கரையான்களாய் மாறி வனத்தாயின் மீது தங்கள் செங்கோட்டையை செம்மண் அரண்களைக் கொண்டு

அமைக்கின்றன. சாரங்கட்டி வெளிப்பூச்சும் நடக்கிறது அரண்மனையின் நாற்புறமும்.

செங்கரையான்கள் பரிணாம வளர்ச்சி பெற்று புற்று ஈசல்களாய் சீறிப்பாய்ந்து வெளிவந்து கட்டுப்பாடின்றி பறக்கின்றன.

ஈசல் பிடிக்கும் கலைஞிகள் அகன்ற திறப்பு கொண்ட களிமண்ணால் தீப்பிழம்பினால் சுடப்பட்ட மட்பாண்டங்களில் தண்ணீரை நிரப்பி ஈசல் புற்றைச்சுற்றிலும் அங்கங்கு இடைவெளி விட்டு மண்ணுக்கடியில் திறந்த மேற்பரப்பு தெரியும்படி வைப்பதும் கூட ஓர் மரபுக் கலைதான்.

மண்பானைகளின் வெள்ளத்தில் விழுந்து சிறகை நனைத்த ஈசல்கள் வெளிவர முடியாமல் உயிர் துறக்கின்றன.

அடுத்த விடியற்பொழுதில் ஈசல்களை சுரைக்குடுவையில் சேகரித்து இறகுகளைப் பிரித்து பிறகு அவற்றை பாறைகளின் மீது பரப்பி வெயிலில் உலர்த்தி நெருப்பில் வறுத்தெடுத்து நேரடியாக உண்கிறார்கள். இல்லையேல் மலைச்சரிவில் விளைந்த செந்நெல் அரிசியைப் பொறித்து அதனுடன் கலந்தால் வரும் மணம் அனைத்து இனக்குழுக்களையும் அதன்பால் ஈர்க்கும் வல்லமைக்குரியது.

வறுத்த ஈசலும் மலைச்செந்நெல் அரிசியும் கலந்த கலவையை ஆட்டாங்கல்லில் அரைத்தும் உண்பர் சிலர். சிலர் அதை ராகிக்கல்லில் மாவாக்கி உண்பர்.

இவ்வாறு பக்குவம் செய்யும் பொழுது ஈசலின் தலையைக் கொய்து பின்னர் நெருப்பில் வாட்டினால் சிறப்பு.

ஒரு தட்டையான கல்லை ஒரு மரக்குச்சியில் தாங்கி நிற்கவைத்து அதனை ஊனாங்கொடியால் இழுத்து தரையில் வேறோர் கல்லில் கட்டிவைப்பர். முயல்கள் அந்த ஊனாங்கொடியைத் தாண்டும் பொழுது அவற்றின் கால்கள் கொடியைத் தட்டியதும் தட்டைக்கல் முயலின்மீது சாய்ந்து அவற்றின் கால் அல்லது உடலின் மீது விழுந்து அழுத்திக்கொள்ளும்.

வேட்டைப் பெருங்குடிக் கலைஞிகள் அதனைத் தோலுரித்து தீயில் வாட்டி உணவுப் பதார்த்தமாக்கிடுவர் எதார்த்தத்தின் ஊடே.

அதுவே பிடிபட்ட உயிரினங்கள் சிறு குழந்தைகள் (இளம் குட்டிகள்) எனில் அவற்றிற்கு வைத்தியம் செய்து செல்லக்குழந்தைகளாய்த் தங்களின் கனம்பில் வேய்ந்த வீட்டில் வளர்ப்பது வேட்டைக்கலைஞிகளின் விருப்பமான விடயங்களில் ஒன்று. அணில் வேட்டையின் போது பிடிபடும் அணிற்பிள்ளைகளைத் தம் பிள்ளையென வளர்ப்பர், இவ்வனவாழி இனக்குழுவினர்.

கதுவாழி என்றொரு அற்புதப் பறவையினம் உண்டு. மனிதிகளுக்குப் பழக்கப்பட்ட கதுவாழியைக் கூண்டில் வைத்து புதர் நிறைந்த அடர்ந்த காட்டில் அக்கூண்டைத் திறந்து வைத்துவிட்டால், அந்தக் கதுவாழியானது இணைநண்பியைத்தேடித் தன் ஆளுமையால் கவர்ந்து இழுத்து வந்துவிடும்.இதுவும் வனவாழ் மனிதிகளின் வாழ்வியல் கலாச்சாரத்துடன் ஒன்றியதே.

இம்மனிதிகளால் மேற்க்கொள்ளப்படும் செயற்பாடுகள் அனைத்தும் கலாச்சார வாழ்வியற் கூறுகளால் பிணைக்கப்பட்டு இயற்கைக்குப் பாதகம் விளைவிக்காதவை.

வனவாழ் இனக்குழுவினர் எவரும் இத்தகு நடவடிக்கைகளை வர்த்தக ரீதியிலோ இயற்கை சமநிலைக்கு மாறாகவோ முன்னெடுப்பதில்லை. காரணம் தற்சார்பு வனவாழிகளுக்குப் பொருள் எதற்கு?..

## அத்தியாயம் - 6

## பூமிக்கும் மனிதிக்கும் புரிந்துணர்வு ஒப்பந்தம்

பூமித்தாயின் மேல்உடல் (மெல்லுடல்) புனிதம் ஏற்ற தேகமே புறப்பரப்பு அதுவே தரை என்றும், பூமி என்றும், நிலம் என்றும், இடம் என்றும், கடல் என்றும், காடென்றும், மலை என்றும் காட்சியை அள்ளி வழங்குகின்றது. அத்தகைய மெல்லிய தரைக்கும் மனிதிகளின் பாதங்களுக்கும் இடையே இயற்கையில் இயல்பான புரிந்துணர்வு ஒப்பந்தம் ஏற்படுத்தப்பட்டுள்ளது.

மனிதிகளின் பாத உராய்வுகளின் ஊடாகத் தன் சுவாச காற்றை உயிர்க்காற்றாய் உள்வாங்கிக் கொள்கிறாள், பூமித் தாயானவள்.

மழலை மனிதிக்கும் தாய் மனிதிக்குமான பிணைப்பு எத்தகையதோ அதைக் காட்டிலும் அதிஅணுக்கமானது பூமித் தாய்க்கும் அதன்மேல் வாழும் பல்லுயிர்களுக்குமான இறுக்கமான பிணைப்பு.

திங்கள்தோறும் குறைந்தது ஒரு முறையேனும் வயலி நாட்டுக் குடிகளாகிய மனிதிகள் ரக்கிரி தேடி வேட்டைக்கு செல்வதை தங்களின் பெரும் கலைகளில் ஒன்றாக மதிக்கின்றாள்கள்.

பேரியற்கையே பெண்மைத் தன்மை ஏற்றதுதான் என்பதை எந்நாளும் போற்றுகின்ற மனிதியானவள்கள், ஒருவளுக்கொருவள் எந்த பொழுதாயினும் மிக்க அரவணைப்பையும் மிகுந்த நெகிழ்வையும் பரிமாறிக் கொள்கிறாள்கள்.

அதன் உட்சபட்சமே இரண்டு அல்லது அதற்கும் கூடுதலான மனிதிகள் ஊடல் கொண்டு கூடல்ஏற்று 'ஓரில்ல மனிதிகளாய்' பக்குவம் கொண்டு வாழ்கிறாள்கள்.

நூற்றைம்பதாம் அகவை கடந்த மதிக்கத்தக்க செம்மரமொன்றை வெட்டும்பொருட்டு வனப்பேரியம் விதிப்படி வனவாழ்விகளின் ஆலோசனை அவையானது தனது முதற்கூட்டத்தை கூட்டுகிறது.

மிக அற்புதமாய் பத்துத்திங்களுக்கு (திங்கள்= மாதம்) ஒரு திங்கள் ஆலங்கட்டி மழை பொழியும் என்பது இயல்பு. அவ்வாறு நூற்றுஐம்பது ஆலங்கட்டி மழை கண்ட செம்மரம் ஒன்றை அறுத்தெடுக்க அனுமதி கோருகிறாள் பிணியுற்ற மனிதியொருவள்.

எனது தேகம் வெளுத்துக்கொண்டிருக்கிறது அதை சீராக்கும் பொருட்டு மருந்தியல் விடயமாக நான் செம்மரத்தை வெட்ட விரும்பி இந்த மனிதிகள் அவையில் முன்மொழிகிறேன்.

செம்மரப்பலகையில் படுத்துறங்கும்பொழுது வியர்வை சுரப்பிகளால் செம்மரத்தின் மீச்செந்நிறமிகள் உள்வாங்கப்பட்டு ஏழு முழுநிலவுகளில் அதன் விளைவாய் தேகமும் தேவையான முன்னேற்றத்தை வெளிப்படுத்தும் என்பது பெரும்பக்குவப்புரிதல் கொண்ட வைத்தியச் செவிலியின் தக்க அறிவுரையின்படி இந்த அனுமதியை கோருகிறேன் என்கிறாள் வனமனிதி.

வனவாழ்விகளின்  ஆழ்ந்த ஆலோசனை மற்றும் கருத்துப்பரிமாற்றங்களுப் பிறகு மரம் வெட்டுவதற்கான அனுமதி கட்டுப்பாடுடன் வழங்கப்படுகின்றது.

அக்கட்டுப்பாட்டின் படி,

மரத்தை வெட்டி எடுக்கும் முன் மரத்தின் அனுமதி கோருதல் அவசியமாகிறது.வனவாழ்விகளின் உயிராய் விளங்கும் மலையின் உயிராகிய மரமே உன்னை மருந்தியல் தேவைக்காக நான் வெட்டுயெடுக்க விரும்புகிறேன் அதற்கான அனுமதியைப் பெற

விரும்புகிறோம். "உனக்கு உடன்பாடு எனில் உடனே சிறிய கிளை ஒன்றை முறித்துக் கீழே இறக்கு இல்லையேல் அமைதிகாத்திடு" என்று மரத்திடம் வனவாழ்விகள்  அவையானது உதவி கோருகின்றது.

அவ்வண்ணமே கிளை ஒடிந்து கீழே இறங்க செம்மரத்தின் அனுமதியுடன் அம்மரம் வெட்டப்படுகிறது.

உணவு பரிமாறிய பிறகும் பக்குவம் மாறா பரிமாணத்துடன் துளியும் அர்ப்பணிப்பு குறையாது இன்முகத்துடன் காத்திருக்கிறாள் மனிதி, கேழ்வரகுக்கலியின் சூடு தணியும் என்று தணிந்ததும் காட்டுமாட்டுத் தயிரை சேமை இலையில் (சேப்ப இலை) வைக்கலாமென்று எதிர் நோக்கியவாறே..!

கற்றாழை கிழங்கை அகழ்ந்து, கற்றாழையின் கழுத்தை அறுத்து முறித்து பிளந்து உண்ணும் நிகழ்வும் மனிதிகளுக்கு பழக்கமான ஒன்று இதன் சுவையும் சத்தும் எதிலும் கிடைக்காது.

புரட்டாசி மாதம் என்றால் மலைமனிதிகள் முழுக்க ஒரே மலையில் கூடும் மலை கம்பத்ராயன் மலை.

மலைத்தாய்க்கு நன்றி செலுத்தும் பொருட்டு கூட்டு பொங்கல் வைத்து அவளுக்குப் படைத்து கொண்டாடுவது சிறப்பு.

**அத்தியாயம் - 7**

**யுத்தகளத்தை யொத்த காளான் வேட்டை**

பெரும் அணிதிகழ் மழை பெய்யும் காலப்பெருவெளியின் உடனடி விடியற்பொழுதுகளில் காளான் வேட்டைக்குப் புறப்படுதல் என்பது யுத்த களத்திற்கு செல்வதையொத்தது. அணிவகுப்பும் ஏற்புஉரையும் ஏற்பாடும் நடந்து கொண்டிருக்கிறது. இவ்வகையிற் வனமுதலி பச்சைப் பழகி ஆனவள் அனைத்து மனிதிகளுக்கும் வழிவழங்கும் பெரும்பணியை திறம்பட ஏற்றுநடத்துகிறாள்.

காளான் வேட்டை என்பது மிகுந்த புரிதலுக்கு உட்பட்டு செயலாற்ற வேண்டிய விடயம் ஏனெனில் மண்வளமும் மக்கிய இலை தழைகள் வழங்கும் செறிவும் தேங்கிய பூமியில், மழைநீர் தங்குவதால் மலைத்தாய் குளிர்ந்து அவ்வப்போது நிகழ்வைக் காண அவள் கண்கொண்டு எழுகிறாள் அவ்வாறு எழுகையில் மழைநீரிலிருந்து தன் கண்ணைக்காக்க குடை விரிக்கிறாள் மலைமகள்.

புரட்டாசியின் பிற்பகுதியில் இந்நிகழ்வு அரங்கேற்றம் பெறுகிறது.

மழைக்காளான், எருமைத்தண்டு காளான், துளிக்காளான் போன்றவை உண்பதற்கு ஏற்ற காளான்களாக மலைமனிதிகளால் அடையாளம் காணப்படுகின்றது.

அவ்வாறு காளான் தேடலில் ஈடுபடும் பொழுது ஒரு காளானை கண்டுபிடித்தால் மற்றொரு காளானை கண்டுபிடிப்பது மிகவும் எளிமையானது ஏனெனில் அதற்கு எதிர்ப்புறம் இருக்கும் என்பது அவள்களின் புரிதல்.

பிள்ளைப்பேறு பெறும் ஒவ்வொரு மனிதிக்கும் அரசவை வைத்திய செவிலி பாச்சாளி எனும் சேவை செய்யும் அரசாங்க அலுவல்காரி தான் துணைபுரிகிறாள்.

பிறப்பு முதல் குளிப்பாட்டி நீராட்டி சீராட்டி பல திங்கள் அம்மழலையின் சிறப்பை உறுதி செய்வதே அவளின் தலையாய சேவை.

போர் நடைபெறும் சூழ்நிலைகளிலும் பல பிள்ளைப்பேறுகள் ஒத்த காலத்தில் நிகழ்ந்தாலும் அல்லது இது போன்ற பல விடயங்களில் சரக்கொன்றையாள், மயிற்கொன்றையாள், செங்காந்தள், மகிழாள் உள்ளிட்ட ஏனைய உதவிச் செவிலிகளின் உதவி இவளை நாடும்.

பாங்காடுகளில் வேட்டையாடப்பட்ட காட்டு முயல், காடை, காட்டுக்கோழி, கவுதாரி, காட்டுச் சேவல், மலைக்காடை, மிளா எனும் கடமான், கிளைக்கொம்பு கொண்ட நெடுமான் இவற்றின் இறைச்சியை மூங்கில் குச்சிகளில் கோர்த்து சிக்கிமுக்கி கற்களைக் கொண்டு நெருப்பு மூட்டி வாடடி உண்கிறாள்கள்.

என்றாலும்  பச்சிளம் மழலைகளுக்கு இறைச்சி சற்று கடினமாக இருக்கும் என்பதால் முதலில் தீயினால்

சுடப்பட்ட ஊனைத் (இறைச்சியை) தங்கள் பற்களால் மென்று இறைச்சியை இலகுவாக்கி பிறகதை மழலைக்கு உண்ண வழங்குகிறாள்கள்.

வளரும் மழலை பெண்மழலை இல்லையெனில் ஐந்தாம் அகவையில் பெருமனிதிக் கூட்டத்திலிருந்து இடப்பெயர்வு பெற்று பெருமனிதன்களின் கூட்டத்திற்கு வந்தாக வேண்டும் என்பது பேரரசி இளங்காடாளின் ஆணை மட்டுமன்று. அரசியாள் கோட்பாட்டின் கூறும் அதுவே. இயல்புசார் மரபுவாழ்வியலும் அதுவே.

பெண் மழலை எனில் ஐந்தாம் அகவையில் ஆனையை அடக்கி வழிநடத்தும் பெரும் போர்களைக் கற்றுத் தேர்ந்திடுவாள். காரணம் பாங்காடும், பல்லுயிர்காத்தலும் மனிதிகளின் பெரும் பொறுப்புகளில் தலையாயது.

ஒரே வாழ்விடத்தில் பச்சிளம் மழலையர்கள் பலர் இருப்பின் ஒரு சில தாய்மனிதிகளே அவர்களை பேணுகிறாள்கள். மற்ற தாய்மார்கள் சமர்க்கள பயிற்சிக்கு அல்லது வனவாழ்வியற் களப் பயிற்சிக்கு அல்லது மற்ற பல சூழலியல் விடயங்கள் குறித்து காத்தல் மீட்டல் நடவடிக்கைகளில் ஈடுபடுகிறாள்கள்.

இவ்வாறான சூழலில் பல மழலைகளை ஒரே பொழுதில் பேணுகின்ற ஒரு தாய்மனிதி ஆனவளே பிரிதொரு தாய் மனிதியின் மழலைக்கும் தன் மார்புப்பாலை மாண்புடன் ஊட்டுகிறாள். இந்நிகழ்வே அத்தனை மழலையர் கூட்டத்தின் அழுகுரலை இனிகுரலாக்கி கொஞ்சலைப் பரிமாறிக் கொள்கின்றது. இத்தகு நிகழ்வு வெளிமனிதிக்குத் தெரியாவண்ணம் காக்கப்படுகிறது என்கிறாள் தலைமை வைத்தியச்செவிலி.

தாய்மனிதிகளின் இந்த பேரற்புத நிகழ்வு மனிதியின் பெரும் உளவியற்செயல்பாட்டிற்கு முன் மொழியை வழங்குகிறது. தாய்மனிதியின் முலைமார்பானது தன்மழலை என எண்ணின் மட்டுமே தாய்ப்பாலைச்

சுரக்கிறது ஆகவேதான் அவள் எவ்வித வேறுபாட்டையும் காட்டவில்லை என்பதை ஆழிசூழ் பேருலகம் அவ்விதமே உறுதிசெய்கிறது.

எந்தத் தடுமாற்றமும் இன்றி அவளின் உடலும் அவள்தன் பேரற்புத முலையும் தங்களை இச்சேவையில் உட்படுத்திக் கொள்கின்றனர். பூமித்தாயின் புது அவதாரத்தை புனிதமேற்றுச் சமன் செய்கிறாள்கள் தாய்மனிதிகள்.

மழலை பிறந்தவுடன் சில திங்கள் தாய்ப்பாலும் தெளிந்த காட்டாற்று நீரும் மட்டுமே ஆதாரமாய் அளிக்கப்படுவது மரபு.

சில திங்கள் கடந்து, எதிர்வருகின்ற ஒவ்வொரு திங்களும் இருமுறை பனங்கள்ளும் ஈச்சம் பதனீரும் மதிய வேளையில் கொடுக்க மழலை உறங்கிக் கொள்வாள் என்பது உண்மை.

மறுதிங்கள் கடந்ததும் மலைநாட்டு மாமிசங்களை உண்ணக் கொடுப்பது இயல்பு. அத்தகைய அற்புத உணவை அன்னையின் இடுப்பில் அமர்ந்து ருசிப்பதில்லை அவள் ஆனையின் முதுகில் அமர்ந்து ரசிக்கவும் ருசிக்கவும் துவங்குகிறாள், இயற்கையை

இயற்கையாய் பழகுகிறாள். மழலைமனிதி
மலைமனிதியாய் மகுடம் சூடுகிறாள்.

## அத்தியாயம் - 8

## ஆனைப்பற்றாளிகள்

வேழத்தின் மீதான ஆளப்புரிதலே அவள்களின்
வாழ்வியலை ஏற்று நடத்துகிறது.

ஏந்து கொம்பனின் வளைந்த கொம்புகளில் தொங்கி
தாவி ஏறிக்குதித்து விளையாட்டினூடாக வீரக்கலையும்
கற்கின்றது  இளைய மனிதிக்கூட்டம்.

ஆனைக்கும் மாதவிடாய் காலம் உண்டென்பதை
உணர்ந்து அறிந்தவள்கள் அவள்கள்.

காட்டாற்றின் துயிலிடமாம் நீர்தேக்க பகுதியில் உலர்ந்த சுரைக்குடுவையினை ஊனாங்கொடியில் ஒன்றாகப் பிணைத்து அவள்களின் இடையுடன் இணைத்துக் கட்டி நீர்ப்போக்கினை நீந்தக் கற்கிறாள்கள்.

சுரைக்குடுவையினுள் இருக்கும் காற்றுப்பைகள் மழலையர்களை நீரினுள் மூழ்கவிடாமல் உயர்த்துகிறது. ஆகவே காட்டாற்றினை மெல்லப் பாங்குடன் நீந்தக் கையாள்வதே கற்றலின் அடிநிலை.

நீந்தக் கற்றலின் உச்சநிலை காட்டாற்றினை அதனெதிர் போக்கில் எதிர்கொள்வது. மழலையர் கூட்டம் அச்சமின்றி உச்சநிலையிலும் தேர்ந்தெழுகிறது.

மலைவல்லாரை மனிதிகளின் மார்புக்கு நல்லது என்றால், ஓரிதழ்ச்செடி உடலின் காற்றோட்டத்திற்கு நல்லது என்றால், நிலப்பனங்கிழங்கு பாதத்தின் நீரோட்டத்திற்கு நல்லது என்றால், காட்டுக்கரணை பற்களின் பற்றுறுதிக்கு நல்லது.

உடற்சூட்டைத் தணிக்கும் அற்புத சத்தி கொண்டது துத்திச் செடி என்கிற மரபியல் அறிவு அவளுக்குக் கடத்தப்படுகிறது.

இலுவைச்செடியினது இளம்முட்களை ஏந்திய தண்டை முறித்து ஒதியமலை காட்டெருமைகள் நீர் அருந்தும் முன்னே விடியற்பொழுதில் கடித்துத்தின்றால் அது மனிதிகளின் வயிற்றைத் தூய்மைப்படுத்தும் எனும் நிகழ்வினையும் அறிந்தவள்கள் அவள்கள். மழலை முதல் பேரிளம்பெண் வரை இந்நிகழ்வு வெறும்வயிற்றில் நிகழ்தல் நலம்.

தும்பைச் செடியினை உள்ளங்கையில் கசக்கி தும்பைச் சாற்றை கண்களில் காதுகளில் ஒவ்வொரு சொட்டாக விட்டோமென்றால் பாம்பின் விடம் கூடத்தானாக இறங்கிடும்.

இவை எத்தகைய நிலவியல் அமைப்பிடங்களில் உயிர் கொண்டு இருக்கும் என்பதும் எந்தெந்த பருவ நிலைகளில் அவை கிடைக்குமென்பதும் மனிதிகளின் வைத்திய அறிவிற்குச் சான்று.

பல நிகற்பமளவு பல்லுயிர்களின் வாழ்வியற் புரிதலை ஏற்று வாழ்கிறாள்கள் வனமனிதிகள்.

மனிதிகள் தங்களுக்குத் தாகம் ஏற்படும் பொழுது நீர் அருந்தும் நிகழ்வும் பெரும்போருக்கான ஒத்திகையை ஒத்து நிகழ்கின்றது.

அதிகவனம் மிக்க மனிதியொருவள் தேக்கு மரத்தை நோக்கி அடுத்தடுத்த சீரான இடைவெளியில் இருமுறை மேன்மைதாங்கிய அதிக ஒலிச்செறிவு மிக்க தனித்தன்மை வாய்ந்த ஒலியினை எழுப்புகிறாள்.

அடுத்த சில கணங்களுக்குள் அருகில் இருக்கும் மனிதியானவள் விரைந்து சென்று விரிந்து செழித்த இளமைகடந்து முதுமை திரும்பிக் கொண்டிருக்கும் தேக்குமர இலையை கொய்து கொண்டு வருகிறாள்.

இன்னொரு மனிதி அந்த இலையைப் பெற்று இரு முனைகளையும் சுருட்டி  நடுப்பகுதியை குழியாக்கி ஏந்தியவாறு நிமிர்கொண்டு நிற்கிறாள்.

இன்னொரு மனிதியானவள் தன் இடையில் காட்டாற்று நீரை இடைமறித்து இறுகக்கட்டிய நீளச்சுரையின் குளிர் நீரை அம்மனிதி ஏந்தி நிற்கும் இலையில் ஊற்றுகிறாள்.

துவக்கத்தில் ஒலி எழுப்பிய மனிதி அருகில் வந்து குனிந்து அற்புதநீரை அருந்துகிறாள்.

இவ்வகைப் பழக்கமே அத்தனை மனிதிகளுக்கும் பொதுவானதாகவும் மனிதிக்கு மனிதி செயற்பாடுகளும் பொறுப்புகளும் மாற்றம் செய்யப்பட்டும் நிகழ்கிறது. இந்நிகழ்வு சமர்க்கள ஒத்திகையை ஒத்ததாகவே அமைகிறது.

பனைமரத்து பன்னாடை அல்லது பண்ணுடை என்றழைக்கப்படும் மெல்லிய நாரிழைகளால் இயற்கை தானாகவே பின்னிய மென்மையான வலைப்பின்னலின் மேல்ப்பகுதியில் பருத்தி பஞ்சை வைத்து அதன் மீது மீண்டும் ஒரு மெல்லிய பன்னாடை வைத்து இத்தகைய அணைஆடையை ஆக்கம் செய்து பெருமனிதிகள் தங்களின் விடாய்க்கால உதிரப்போக்கை உறிஞ்சும் பொருட்டு பயன்படுத்தி வருகின்றாள்கள்.

பிறப்புறுப்பினை அணைத்து அனுப்பொழுதும் காப்பதால் அவை அணையாடை என்ற அடைமொழியை ஏற்று நிற்கின்றன.

சமர்க்கள இறுதி நிகழ்வுகளில் மலைவேள் அரையாளை

சேனை முதலியாய் ஏற்ற தலமலை நாட்டு
இரவற்காட்டெருமை படையுடன் இணைந்த வல்ல
மலைநாட்டுப் படை வெற்றி பெற்றிருந்தது எனினும்

வல்லமலை நாட்டுப் பேரரசி முதுவனக்காப்பாளி ஆனவள் மத்திய மலை நாட்டுப் பேரரசி இளங்காடாள் பெருமனிதியின்  அரச ஓலையின் இன்றியமையாமை கருதி, வலசை வரும் கானாங்கோழிகள் மீது நம் நாட்டு வேட்டைக்குடிகள் எவ்வித தாக்குதலிலும் ஈடுபடக்கூடாது அதையும் கடந்து தாக்குதல் நடவடிக்கைகளில் ஈடுபட்டால் அது அரச குற்றமாக கருதப்பட்டு கடும் நடவடிக்கைகளுக்கு உள்ளாக்க நேரிடும் என்கிற அறிவிப்பு வேட்டைகலைஞர்களுக்கு தெரியப்படுத்தப் படுகின்றது.

வல்லமலை நாட்டின் எல்லைக்குட்பட்ட மலைக்காடுகளில் அநேக இடங்களில் இவ்வறிவிப்பு வெளிப்படுகிறது.

இந்நிகழ்வு மத்திய மலைநாட்டு மனிதிகளுக்கும் இளங்காடளுக்கும் பெரும்நெகிழ்வையும் அதீதஆறுதலையும் அளிக்கின்றது.

இருநாட்டு சமரில் மத்திய மலைநாட்டின் வெற்றி வாய்ப்பு வல்லமலை நாட்டிடம் சென்றுவிட்ட போதிலும் எந்நாட்டு அரசி எனினும் ஏனைய நாட்டுவாழ் உயிர்களின் நலன் காத்தல் பொருட்டு எதிரிநாடென்றும் பாராது என்நாடென்று எண்ணி இயற்கை கோட்பாட்டு நீதியை உணர்ந்து காக்கின்றாள் பேரரசியானவள், காட்டையும் காட்டுவாழ் கானாங்கோழி மனிதிகளையும்.

ஆனைப்பற்றாளிகள் என்பவள்கள் ஆனையின் மீது பேரன்பும் பெரும்பற்றும் கொண்ட இளைஞிகளின் திறள்.

மத்திய மலைநாட்டின் மரபு வாழ்வியல் நெறிப்படி பெண்பாற்களிறுகள் (ஆனைகள்=யானைகள்) மட்டுமே நாட்டிற்குள் இருப்பிடங்கொள்கிறாள்கள்.

ஆனைகளையும் ஆனைக்காப்பாளிகளையும் மையப்படுத்தி வாழ்வியலை சில விடயங்களில் ஆனைக்காப்பாளிகளும் அதற்கு சரிசமமான விடயங்களில் ஆனைகளும் தலைமையேற்று பயணத்தை வழி நடத்துவது இயற்கையின் மாபெரும் இயல்பு.

ஆனையை ஆற்றுநீரில் நீராட்டுவதென்பது காணக்கிடைக்காத அற்புத நிகழ்வாம் மலை இருவாட்சிகள் தன் குஞ்சுகளுக்கு இரை கொடுக்கும் அற்புத நிகழ்வை ஒத்தது என்கிறாள் பச்சை பழகி.

மத்திய மலைநாட்டின் அரசால் முதலி பேரரசி இளங்காடாளிடம் நேரடி உள்நுழைவு அனுமதி பெற்று, "ஆணிருப்பு அனுமதியின்" அனைத்து வரையறைகளையும் பின்பற்றி பேரரசி முன்னிலையில் அனுமதி பெற்றாகிவிட்ட பிறகு கூட்டாளியாக கூட்டுக்கு திரும்பி பெண்மையின் மகத்தான இயல்பான அடைகாத்தல் நிகழ்விலிருந்து பெண்ஆட்காட்டியை விடுவித்து அந்தப் பொறுப்பைத் தான்ஏற்கிறது ஆண்ஆட்காட்டி பறவை.

நாட்டிற்குள் நுழையும் எத்தகைய ஆண் உயிர் இனமாயினும் பெண்ணினத்தின் நேர்த்தியுடன் கூடிய பெரும் பண்புகளை அவரவரால் இயன்றளவு பின்பற்ற வேண்டும் என்பது ஆண் இருப்பு அனுமதிக்கான முக்கியமான வரையறைகளுள் ஒன்று.

பல்வகை இனங்களையும் பல்வகை மனிதிளையும் அவள்களின் பல்வகை மரபு கலாச்சாரக் கூறுகளையும் அவ்-அவள்கள் கையாளும் வாழ்வியல் கூறுகளையும் ஏற்ற பன்முகத்தன்மைமிக்க செறிவார்ந்த பல்லுயிர்க்கூட்டமாகத் திகல்கின்ற நிலப்பரப்பை பெருநிலம் என்று அழைக்கிறோம். அவ்விதமே மத்திமலைநாடு பேரரசு நாட்டிற்கு இணையான பல்லுயிர் கூட்டமாக திகழ்வதால் சிற்றரசு நாடென்றபோதும் அரசியானவள் பேரரசி என்றே அழைக்கப்படுகின்றாள்.

வனங்களை வாழ்விடமாகக் கொண்டு ஆரவாரமாய் வலம் வரும் காட்டு மாடுகளை மனிதிகள் தங்களின் பெருந்தீரத்தால் பழக்கப்படுத்தி அவைகளை

வீட்டுமாடுகளாக்கி காட்டுமாட்டின் மடியிலிருந்து பால் கறந்து மழலைகளுக்கு பருகத் தருகின்றாள்கள் மனிதிகள்.

என்றாலும்கூட அவ்வகையிலும் அளவுண்டு.

மூன்றில் இரண்டு பங்கு பாலை முதலில் காட்டு மாட்டு கன்றைஊட்டுவதற்கு விட்டுவிடுவாள்கள் அதன் பிறகு மீதமுள்ள ஒரு பங்கை மட்டுமே கறப்பதற்கு மனிதிகளுக்கு அனுமதியுண்டு.

காட்டுமாடுகள் தன் பாலை மனிதிகளுக்கு வழங்க மறுக்கும் பொழுதுகளில் மாடுகளின் சுதந்திர உரிமைசார்ந்த உணர்வு பறிக்கப்படுவதில்லை.

"நான்கு கால்களும் வெள்ளை

நடுத்தலை சுட்டி

வாலும் போர்வாளை ஒத்த பூவால்"

என்று காட்டுமாடுகளின் அற்புதங்களை கேட்போருக்கு காட்சிப்படுத்தும் வண்ணம் அடையாளப்படுத்தி மகிழ்கின்றாள்கள், மனிதிகள்.

ஆனைக்கும் அறுவைசிகிச்சை செய்யும் ஆற்றல் பெற்றவள்கள் அரண்மனை வைத்தியச் செவிலி பச்சாளியும் உடன்பிற செவிலிகளும்.

ஆனைக்கு எது விருப்பமானது எது விருப்பம் அற்றது என்பது ஆனைப்பற்றாளிகளுக்கு அத்துப்படி.

ஆனைக்கு வெண்ணிறம் சினத்தை ஏற்படுத்தும் என்பது முதற்கொண்டு, தொலைவில் நிற்கும் ஆனைகளைக்கூட அவற்றின் வியர்வைச் சுரப்பிகளின் மனத்தைக் கொண்டு ஆனையானவள் எவ்வளவு தொலைவில் நிற்கின்றாள் என்பதை அறிந்திடும் பேரறிவு பெற்றவள்கள் வனமனிதிகள்.

ஆனைகளுக்கு மதம் பிடிப்பதென்பது ஒரு வழக்கமான நிகழ்வு.  ஆகவே அச்சப்படுமளவிற்கு அதுவொன்றும் அதிபயங்கரமானது அன்று. அந்த காலங்களில் அதிக கவனிப்பும் கண்காணிப்பும் ஆனைசார்ந்த சுற்றுப்புறத்தின் மீது தேவைப்படுகின்றது.

மரித்த ஆனையினை உடற்கூறு அறுவை சிகிச்சைக்கு உட்படுத்தி எவ்வகைப் பிணியென அறிவது பச்சைப் பழகியாளின் பெரும்புரிதலுக்கு சான்றாகின்றது.

ஆனைகள் இயல்பான இழப்பு அல்லது எதிர்பாராத இறப்பு ஏற்படும் பொழுது இயன்ற அளவில் அத்தனை மனிதிகளும் மழலை மனிதிகள் முதற்கொண்டு பெருமனிதிகள் வரை அனைவரும் ஒன்றுகூடி "ஆனையே எழுந்திரு, ஆனையே எழுந்திரு, ஆனையே எழுந்திரு" என கண்களில் நீர்கொட்ட ஆனையை அழைத்து விட்டு அதன்பிறகு ஆரவாரக் கொண்டாட்டத்துடன் மரித்த ஆனையை மண்ணுக்கடியில் மறைத்து வைத்து மலைக்கே மீண்டும் வளம் சேர்க்கும் நிகழ்வு நிகழ்ந்தேறுகின்றது.

ஒரு மாபெரும் ஆனைக்கூட்டம் என்பது நூற்றைம்பது ஆனைகள் வரை இருக்கும் குழுவாகும். ஆனைக் கூட்டத்தை என்றைக்கும் வயதுமுதிர்ந்த பெரும் பக்குவமும் நிகழ்காலப்புரிதலும் கொண்ட முதுபெரும் பாட்டி ஆனையே வழிநடத்துகின்றது.

பாங்காட்டில் சுற்றித் திரியும் ஆனைகள் ஒரு நாளைக்கு 50 முதல் 80 காத தூரம் வரை நடக்கின்றாள்கள். பெரும்பான்மைப் பொழுதுகளில் ஆனைக்கும் மனிதிகளுக்கும் ஊடாக பெரும் புரிதல் உண்டு. அது தவிர்த்து அரிதான சிற்சில பொழுதுகளில் ஆனைகளால்

ஏதேனும் இடர் ஏற்பட்டு மனிதிகளைத் துரத்த முற்படுமாயின் மேடான இடங்களை தவிர்த்து  சரிவான பள்ளமான இடங்களை நோக்கி விரைந்து நகர்வதே மனிதிகளுக்கு எளிதான வழி.

மனிதிகள் மகப்பேறு காலத்தில் சத்துக்களைக் கூட்டுதல் உள்ளடங்க பலவித பிணிகளையும் நீக்கி மக்கட்பேறை சுகமானதாக மாற்றுவதில் விளாம்பழத்திற்கு பெரும்பங்குண்டு என்றால் அது மிகையன்று.

அத்தகு விளாம்பழத்தினை யானைகள் பெருமளவில் விரும்பி உண்கின்றாள்கள். ஆனையினது உடலியற்குடலானது பழத்தின் உட்பகுதி சதைப்பற்றுக்களை மட்டும் உறிஞ்சி எடுத்துவிட்டு அதன் வட்ட வடிவத் தோற்றத்தை மாற்றாமல் மலக்குடலுக்கு

அனுப்பி வைக்கிறது. மலக்குடலும் அதைச் சிதைக்க மனமில்லாமல் ஆசனவாய் வழியாக வெளியேற்றுகிறது, மருத்துவக்குணமும் மூலிகைத் தன்மையும் நிறைந்த ஆனைச்சாணியினூடே.

ஆனைச் சாணியில் முழுப்பழமும் புதையுண்டு கிடப்பது பார்ப்பதற்கு, மரத்திலிருந்து விளாம்பழம் நேரடியாக ஆனைச்சாணியில் விழுந்து விட்டது போலவே தோற்றம் அளிக்கின்றது நோக்குங்கள் இளமனிதிகளே என காட்டுகின்றாள் வனமுதலி பச்சைப் பழகி.

## அத்தியாயம் - 9

## வல்லமை ஏந்திய வனமனிதிகள்

வனப் பயிற்சிக்காகவும் வனப்பற்றின் ஊடாகவும் புரிதல் நிலையை எய்தும் பொருட்டும் இருள்சூழ் அடர்வனத்திற்குள் சூழலியல் நடை மேற்கொள்ளத் துணிகிறாள் மழலைமனிதி. அவள்தன் தாயும் வனப்புரிதல் மிக்கவளுமாகிய மனிதியிடம்சிறுசிறு இலைகள் கொண்ட ஒரு மரத்தை காட்டி இஃது என்ன மரம் என்று வினவுகிறாள். இது சிகைக்காய் என்னும் காரணப்பெயராகிய மனிதியின் சிகைக்கு உகந்த காய் என ஆகிவருகின்றது. அதுவே மறுவி சீகைக்காய் (சீவக்காய்) என்றழைக்கப்படுகிறது.

இதையொத்த அருகில் இருக்கும் மரம் அரப்புத்தழை அல்லது ஊஞ்சத்தழை என்றழைக்கப்படுகிறது இதுவும் மனிதிகளின் கூந்தலை வளமாதாக உருவாக்குவதில் முக்கியப்பங்கு கொள்கின்றது என்று தாய்மனிதி மழலையிடம் பதிலுரைக்கிறாள்.

சுற்றுப்புறத்தை எப்பொழுதும் அதிதீவிர கண்காணிப்புடன் அணுகக்கூடியவள்கள் வனமனிதிகள்.

தழைத்தோங்கி நிற்கும் தேக்கு மரத்தின் உச்சியில் இருந்து தன் வாழ்நாளை முடித்து தனக்கும் மரத்திற்குமான பிணைப்பை முறித்துக் கொண்டு வனத்தாயின்  அடிமடி அரவணைப்புக்காக தரையை நோக்கி விரைந்து வந்துகொண்டிருக்கின்றது தேக்கு இலை.

அவ்வகை செயலாற்றுதல் யாதெனில் வனங்களின் சாமப்பொழுதுகளில் உறங்கும்பொழுது கூட அந்த இலைக்கும் மரத்திற்குமான பிணைப்பு விடுபட்டு  'படக்' என்ற மெல்லிய ஒலி கேட்டதும் உயர்ந்த மரத்திலிருந்து அந்த இலை எவ்வளவு தொலைவு பயணித்திருக்கும் என்பதை எண்ணி உடனடி பார்வையை அந்த தேக்கு இலையின் மீது சமகோட்டில் விட்டு நோக்குகின்ற வல்லமை ஏந்தியவள்களே வனத்தின் பெருமனிதிகள்.

பெருவெள்ளத்தில் தன் வலையில் புகுந்த நீரில் மூச்சுவிடுதல் நெடுநேரம் இயலாததால் வெளிமுந்தி தரைதொட்டு மேல்எழுந்து நிற்கையில் குளிர்காற்று தழுவ நடுங்கிக் கொண்டிருக்கின்ற மலைஎலியுடன் தடவிக் கொடுத்து அதன் மெல்லுடலை மெல்ல உலர்த்திவிட்டு பெருங்கூற்று உரைத்துக் கொண்டிருக்கின்றாள் மழலைமனிதி. அவளுடன் கூற்றாடுகையில் புத்துயிர் பெற்றுத் தன் குளிரையும்

மறந்துநிற்கின்றது மலைஎலி.

கொடிகளால் பெரும்மரங்களை வெட்டி காடுகளை இணைத்து எதிரி நாட்டுப் படையினர் நடமாட்டத்தை அறிந்துகொள்வாள்கள். அந்த கொடிகள் அறுபட்டிருந்தால் பிறநாட்டு மனிதிகளின் நடமாட்டம் உண்டென்பது அறிவூட்டம்.

ஆனைக்காட்டின் பெரும்பான்மையான இடங்களில் அரசியின் அதிகாரப்பூர்வ கண்காணிப்பாளிகளாய் சேவையேற்று செம்மை செய்திடுபவள்கள் ஆள்காட்டிகள் எனும் அற்புதப் பறவையினம்.

ஆட்களின் நடமாட்டமோ அசைவோ தென்பட்டால் அடுத்த உடனடிப்பொழுதில் அலறல் மிகுந்த எச்சரிக்கை தாங்கிய அதீத ஒலிக்குறிப்புகளை எழுப்பி அதன் சமிக்கைகளை சேனைமுதலிக்கு கடத்துவது ஆட்காட்டியின் அற்புத ஆற்றல்.

இவை தம் நாட்டு எதிரிகளுக்கும் பிறநாட்டு எதிரிகளுக்கும் எவ்வித வேறுபாடும் காட்டுவதில்லை. எதிரி என்றதும் எச்சரிப்பது ஆட்காட்டிகளின் எதார்த்தம். ஆட்களை காட்டிக் கொடுப்பதாலே ஆட்காட்டிகள் என்னும் காரணப்பெயருக்கு உரியதென்று மலைநாட்டு மனிதிகள் உரைக்கிறாள்கள்.

பகற்பொழுதை மிகுந்த விழிப்புடன் கண்காணிக்கும் சிவப்பு மூக்கு ஆள்காட்டிகள் இரவை மிகுந்த விழிப்புடன் கண்காணிக்கிறாள்கள். ஆட்காட்டிகளின் எச்சரிக்கை மிகுந்த அலறல் ஒலியானது பல காததூரம் கடந்து நெடுந்தொலைவு பயணிக்கின்றது.

சிவப்பு மூக்கு ஆள்காட்டிகள் கண்காணிப்பாளிகளாக சேவை ஆற்றுவது போன்றே வெள்ளைமுக்கு ஆட்காட்டிகளும் உயிர்காக்கும் வைத்தியச்சேவையில் ஈடுபடுகின்றாள்கள்.

விடம்மிக்க கொடுந்தேள், நச்சுப்பாம்புகள் உள்ளிட்ட உயிரினங்களின் தாக்குதலுக்கு மனிதிகள் உட்படும்பொழுது அவள்களை உடனடியாக வைத்தியச்செவிலியின் இருப்பிடத்தை அடையும் பொருட்டு வெண்மூக்காள் உதவியில் ஈடுபடுகின்றாள்கள்.

பிணியாளியை (நோயுற்றவளை) மூங்கில்களை கிழித்து படுக்கையாகி படுக்க வைத்து அழைத்துச் செல்கிறாள்கள். அவ்விடயம் "வனவாழ்விகளே! எவரும் வழிப்பாதையில் இடையூறு செய்யாதீர் வனவாழ்விகளே" என்பதை வலியுறுத்தி விரைவுநிலையில் விழிப்பு ஒலிஎழுப்பி பிணியாளிக்கு முன்னே பறந்து தடங்கள் இல்லா வழித்தடத்தை உறுதிப்படுத்துகிறாள் வெண்மூக்காள்.

இது தவிர்த்து வைத்தியச்செவிலிக்கு மூலிகை தட்டுப்பாடு ஏற்படின் முந்திக்கொண்டு அடர் கானகத்தில் அலைந்து திரிந்து அதிவிரைவில் மூலிகை எடுத்துவருவாள் வெண்மூக்காள்.

புரட்டாசி கார்த்திகை மார்கழி தை மாதங்களில் கடும் குளிர்காலம் என்பதை மனிதிகள் அறிந்து கொள்ளும் முன் மயில்கள் புரிந்து கொள்கின்றாள்கள். உண்மையில் மயில்களுக்கு முன் அவற்றின் இறகுகள் உதிர்ந்து பரிணாம வளர்ச்சியை ஊக்குவிக்கின்றன. எதிர்வருகின்ற குளிர்காலத்தை தாங்கிக் கொள்ளும் பொருட்டு இது நிகழ்கின்றது.

நீளக்கழுத்தால் என்ற சிறப்புப்பெயர் பெற்ற பெருங்கோழிக் கூட்டங்களில் ஒன்று மயிலினம். ஆம், அவை குனிந்து நீர் அருந்திவிட்டு மீட்சி தன்மைமிக்க இயல்பு நிலைக்கு திரும்பும்பொழுது மயிற்கொண்டையும் ஒருசேர ஒத்திசைவு அனுமதியை தாமாக முன்வந்து வழங்குகின்றது. அந்நிகழ்வு பேரெழில் மிக்கது என்கிற பச்சைப் பழகியாள், களப்பழகியர் கூட்டமான மழலைமனிதிகளுக்கு காட்சியை சாட்சியுடன் நீட்சியாக்குகிறாள்.

வனச் சூழலியல் ஆய்வு நிமித்தமும் களப்பணி

நிமித்தமும் அல்லது சமர்நிமித்தமும் அல்லது மற்ற வாழ்வியற்கூறு நிமித்தமும் எதுவாயினும் மனிதிகள் தங்கள் வாழ்விடத்தை விட்டு புறப்படும்பொழுது முதுமனிதிகளிடம் சென்று வணங்கி வாழ்த்துப் பெற்றுச் செல்வது மரபு. அம்முதுமனிதிகள் "மகராசியாய் போய்வா மகளே போய்வா" என்று வாழ்த்துரைத்து அனுப்புவர்.

முதுமனிதிகளின் வாழ்த்தென்பது நாட்டு வாழ்மனிதிகள் உட்பட அத்தனை வனவாழ்விகளுக்கும் உரித்தான ஒன்று.

பசிக்கு பூனை அழுவதும் குழந்தை அழுவதும் ஒத்த ஒலிக்குறியைக் கொண்டதே. ஆளுமைமிக்க தாய்மனிதியொருவள் அழுகுரல் கேட்டதும் சமர்க்கள பயிற்சியினை இடைமறித்து விரைகிறாள் மழலையின் அருகில் அங்கு தான் காண்கிறாள் அழுவது பூனையென்று உணர்ந்து உறுதிப்படுத்திக் கொள்கிறாள்.

பெற்ற தாயான அவளையே ஏமாற்றவல்லது
இயற்கையின் ஆக்கம்.

## அத்தியாயம் - 10

## பாங்காட்டுப் புரிதல்

மனிதிகள் உட்பட பல்லுயிர்கள் அத்தனையும் அடர்ந்து வாழும் பெரும் வனங்களே 'பாங்காடுகள்'.

மலைமழலையர்கள் பாங்காடுகளில் எங்கு

வேண்டுமானாலும் விளையாடிக் கொண்டிருப்பார்கள்.

வழிப்போகும் மனிதியிடம் உண்பதற்கு ஏதேனும் இருக்கிறதா பெருமனிதியாரே.. என்கிறாள் செஞ்சேய் எனும் மழலை. அதற்கு மறுமொழியாய் கட்டாயம் உங்களுக்கு இன்றி வேறுயாருக்கு இவ்வுணவு.. அமருங்கள் உண்போம் அற்புதக் கேழ்வரகுக்கலியையும் பர்கூர் மலைமாட்டுத் தயிரையும்.

என்றவாரே  வாழ்த்துக் கூறி, தேக்கு இலை மடிப்புக் கலியை எடுத்து வழங்குகிறாள் வழிப்போகின்ற மனிதி.

உண்பதற்கும் உணவிற்கும் பாங்காட்டில் ஒருபோதும் பற்றாக்குறை இருந்ததில்லை.

ஊன்உண்ணிகளுக்கும் தாவர உண்ணிகளுக்கும் மனிதிகளை உள்ளடக்கிய பல்லுயிர் கூட்டங்களுக்கும் அதுவே பொருந்தும்.

குழந்தையைக் கருவறையில் ஏந்தி இருக்கின்ற காலப் பெருவெளியில்  தூதுவளை, துளசி, நொச்சி,கருநொச்சி, கருந்துளசி, திருநீற்றுப்பச்சிலை,மாசிப்பச்சிலை, ஆவாரம்பூ, அரைப்புத்தலை, ஆனைச்சாணி உட்பட பல்வகை மூலிகைகள் கலந்த காட்டாற்று நீரில் குளிப்பதென்பது மனிதியின் உடலுக்கு மட்டுமின்றி அவளின் இணை உயிரான அண்டம் காக்கும் கருவிற்கும் நன்மை பயக்கின்றது.

கோவைப்பழம், கள்ளிப்பழம், சோற்றுக்கற்றாழை, காட்டு அத்திப்பழம், பலாப்பழம், விளாம்பழம், கெலாக்காய், புளியம்பூ, புளியம்பிஞ்சு, சீத்தாப்பழம் (தவுட்டுப்பலா), காட்டு எலந்தை, இனிப்புக்கிழங்கு என எண்ணற்கரிய பல்வகை மூலிகைகள் கலந்த நீரே கருவை ஏந்திய மனிதிகளுக்கு நீரருந்தவும், நீராடவும் பயன்படுகின்றது.

பெருமனிதிகளின் கையினது ஐவிரல்களை ஒத்த மாலைப்பொழுது வெய்யோனைச் சூழ்ந்த செறிவார்ந்த செம்மையும், மாமஞ்சளும் பிணைந்த வண்ணத்தில்

கண்ணைக்கவர்ந்து கண்ணுக்கே வலிஏற்படுத்தும் அளவிற்கு ஒளிச்செறிவு மிக்கவை செங்காந்தள் மலர்கள்.

ஐப்பசி மற்றும் கார்த்திகை மாதப் அதிகாலைப்பொழுதுகளில் மலர்ந்து மலைகளின் எழிலாய் விளங்கி அடுத்த சிற்சில பொழுதுகளில் விதைகளாய் மாறுகின்றன, செங்காந்தள். இவை கடும் மூலிகைத் தன்மையும், அதே அளவு நச்சுத்தன்மையும் பெற்றவை.

செங்காந்தள் செடி மத்திய மலைநாட்டின் காக்கப்பட வேண்டிய செடிகளில் முக்கியமான ஒன்று. கடுங்குளிர் பொழுதுகளின் துவக்கத்தில் கடுக்காய் மரமானது மலரத் துவங்கி அதன் மத்தியில் காய்த்து குளிரின் இறுதியில் முதிர்ந்து மரத்திலிருந்து கீழே விழுகிறது கடுக்காயாய்.

கண்காணிப்பு மனிதிகள் அடர்ந்து விரிந்த பெருமரத்தின் மீது பரண் அமைத்து காட்டைக் கண்களால் அளக்கிறாள்கள். அவள்களுக்கு உறுதுணையாய் ஆட்காட்டிகள் அம்மரத்திலோ அல்லது அடுத்த உயர்ந்த மரங்களிலோ அமர்ந்து கண்காணிக்கிறாள்கள்.

மனிதிகளின் அனைத்து செயற்பாடுகளிலும் உற்ற தோழியாய் தோள்கொடுத்து நிற்பவை ஆள்காட்டிகள்.

நெட்டாண்டுகள் பலவற்றைக் கடந்து நிகழ்பொழுதிலும் நிமிர்கொண்டு நிற்கின்ற பேருவேம்பினது சிறுவேரின் ஒரு பாகத்தை சற்று கூர்மையான கற்களினால் செதுக்கி அதன் தோளில் கீறல் ஏற்படுத்திவிட்டோமெனில் அத்துயர் தாங்காமல் அந்தப் பெருவேம்பே வேரின் ஊடாக கண்ணீர் விடுகிறாள். அவள் விடுகின்ற கண்ணீர் பானையில் சேகரிக்கப்படுகின்றது. அதையே 'கசப்புத்தேனென்று' மனிதிகள் போற்றுகிறாள்கள்.

அத்தகு கசப்பு தேனினைக் குடிப்பதால் மனிதிகளின் உடலின் உள்உறுப்புகளில் தொற்று அல்லது வேறு வகை உடற்கூறு பாதிப்பு இருக்குமாயின் அவை அனைத்தும் கசப்பு தாங்காமல் சுயதற்கொலைக்குத் தங்களை உட்படுத்திக் கொள்கின்றன.

வேப்பமரம் ராத்திரி முழுவதும் ஏறக்குறைய அறுபது நாழிகைகள் சொட்டு சொட்டாய்ச் சிந்திய கண்ணீர்தான் கசப்புத்தேன் அல்லது 'வேப்பந் தெளுவு' என்று அழைக்கப்பட்டு பெருமனிதிகளின் உடலியற்புலனாய்வுக்கு பெரும் துணை நிற்கிறது. பேரியற்கை பெருந்தன்மை கொண்டு வழங்கிய அற்புதக் கொடைகளுள் இதுவும் ஒன்று.

பல நூற்றடி மீயுயர் கொண்டு செழிப்புடன் ஓங்கிநிற்கின்ற இனமே இலுப்பை மரம்.

கோடையின் பெரும்பொழுதுகளில் குளிர் காற்றை உற்பத்திசெய்யும் வனத்தின் வனப்புமிக்க மரமிது. இலுப்பம் பழம் குரங்கிற்கும் வௌவாலிற்கும் சிறந்த உணவு. இந்தப் பழங்களைக் காயவைத்து விதைகளை எடுத்து வாகை மரத்தினால் ஆன செக்குகளில் இட்டு இடித்து இலுப்பை எண்ணெயாக்கி அதில் உணவு சமைக்கின்றாள்கள் மனிதிகள். அவசரமான விடயங்களில் தீப்பந்தம் ஏற்றுவதற்கு இலுப்பை எண்ணெய் பயன்படுகிறது.

வயலி நாடென்பது சமதளமும் மலையும் சரிவரப் பகுத்துக்கொண்டாடுகின்ற மலைக்காடுகளையும் அதையொட்டிய சமவெளிப் புவிஅமைப்பையும் கொண்ட நாடு.

வயலிப் பேரரசின் ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்துகிறாள் பேரரசி நேர்வயலி நேர்த்தியாள். இவள் முதுமூத்தமனிதியும் பேரரசியுமான நல்வயலி நாட்டாளின் இருபத்தேழாம் பெயர்த்தி (மகளின் மகள்) ஆவாள்.

இப்பொழுது மத்திய மலைநாட்டிற்கும் வயலி நாட்டிற்கும் இடையே சமர்.

பேரரசி இளங்காடாள் தலைமையிலான மத்திய மலைநாடு எதிர்கொள்ளும் முதல் சமவெளிச்சமர் இதுவே.

இம்முறை போரானது சமவெளிப்பரப்பில் நிகழ்வதாலும் மத்தியமலை நாடானது பேரரசு நாட்டை எதிர்கொள்ளவிருப்பதாலும் செயல்முறை உத்திகள் அனைத்தையும் மறுசீரமைப்புச் செய்யவேண்டியது அவசியமாகின்றது. உத்தியின் நிறைவேற்றுநிலைப் பரிணமிப்பே செயல்முறை உத்தி.

பேரரசு நாட்டுப் போரில் மத்திய மலைநாட்டின் சமர்க்கள செயல்பாட்டு உத்திகளுக்குப் பொறுப்பாளியாக நின்று வழிநடத்துகிறாள் இளவனவாழி எனும் சேனைமுதலி.

## அத்தியாயம் - 11

## மூங்கில் வேட்டை

பாங்காட்டில் மூங்கில்கள் பெருமளவில் வெட்டப்படுகின்றது. இத்தகு வனவியல்சூழலுக்கு எதிரான அரங்கேற்றத்தில் வயலி நாட்டு மனிதிகள் ஈடுபடுகின்றனர்.

இயற்கைக்குப் புறம்பான இந்தச் செயற்பாடுகளால் மலை மண்ணில் நீர்த்தேக்கி வைக்கும் தன்மை பாதிப்பிற்குள்ளாகிறது. இதன் விளைவாக ஒட்டுமொத்த உயிரினப்பன்மையும் பல்வேறு இன்னல்களைச் சந்தித்துக் கொண்டிருக்கிறது.

ஆனைகளுக்கு விருப்பமான ஈத்தல் மூங்கில் வகையும் இவ்வாறு அழிவிற்குள்ளாக்கப்படுவதால் ஆனைகளுக்கான உணவுப் பற்றாக்குறை ஏற்படுகிறது. இதன் உச்ச நிலையாய் ஆனை-மனிதி மோதல்களும் நிகழ்கின்றது.

இந்நிகழ்வு மேற்க்கொண்டு கட்டுப்பாடின்றி
தொடர்ந்தால் குறிப்பிட்ட காலப்பெருவெளியில்

மூங்கில்கள் முற்றிலுமாக அழித்தொழிக்கப்பட்டுவிடும்
என்கிற பேராபத்து மத்திய மலைநாட்டு மனிதிகளால்
உள்வாங்கப்படுகின்றது.

மூங்கில்கள் வெட்டப்படுவதால் வேர்களின் பிடிமானம்
தளர்ந்து மலைகளில் மண்அரிப்பு, நிலச்சரிவு,
மழையின்மை உட்பட ஏராளமான இயற்கை
முரண்பாடுகள் உண்டாகி ஒட்டுமொத்த
வனவாழ்விகளுக்கும் அது பேராபத்தை
விளைவிக்கக்கூடும்.

கூடை முடைவதற்கும், கொடாப்பு, கூடாரம் மற்றும்

மரத்தின்மேல் பரண் அமைப்பதற்கும், படுக்கை அமைப்பதற்கும், துயிற்கூரை வேய்வதற்கும் இன்னும் பற்பல தேவைகளுக்கும் மூங்கில்கள் பயன்படுகின்றன.

இவை சொந்தத் தேவைகளைத் தாண்டி பெருமளவில் பண்டமாற்றுப்பொருளாகப் பயன்படுத்தப்படுகின்றன.

இம்மூங்கில்கள் மத்திய மலைநாடு , வல்லமலை நாடு, வயலி நாடு கடந்து நெடுந்தூரம் பேரரசுகளுக்கும் சிற்றரசுகளுக்கும் அதிகப்படியான பண்டப்பரிமாற்றம் செய்யப்படுவதென்பது பல்லுயிர் வாழ்வியலுக்கு எதிரானது.

ஆகவே தான் மூங்கில் வேட்டை முறைப்படுத்தப்பட வேண்டுமென்ற கோரிக்கை மத்திய மலைநாட்டு வாழ் அத்தனை உயிர்களின் சார்பில் அவள்களின் தலையாய வாழ்வியாய் விளங்குகின்ற பேரரசி இளங்காடாள் பெருமனிதி வாயிலாக முன்வைக்கப்படுகின்றது.

வயலிநாட்டுப் பேரரசி நேர்வயலி நேர்த்தியாளின் நேர்த்திமிக்க அரச ஓலையின் ஊடாக இதற்கு எதிர்விளக்கம் தரப்படுகின்றது.

பேரரசு நாட்டுக்கிணையானதொரு சிற்றரசை பக்குவமிக்க நெடுவழியேற்று நடத்திக்கொண்டிருக்கின்ற பேரரசி முதுகாடாளின் மூன்றாவது மகளாகிய அதிஆளுமைமிக்க பேரரசி இளங்காடாளுக்கு எம் வயலி நாட்டின் சார்பாக நவிலல்களும் நல்வணக்கங்களும் என அரசவோலை துவங்குகிறது.

மத்திய மலைநாட்டின் அரசஓலையானது நேற்றைய சிறும்பொழுதில் கிடைக்கப்பெற்றது. அதனை அரசவையில் ஆலோசனைக்கு உட்படுத்தி மேற்க்கொண்டு எத்தகைய செயற்பாடுகள் முன்னெடுக்கப்பட வேண்டும் என்பதை உறுதி செய்துவிட்டு இளங்காடாளுக்குத் தெரிவிப்பது வயலி நாட்டுப் பேரரசி(யி)ன் பெருங்கடமைகளுள் தலையாயது.

ஆயினும் அதற்குச் சில சிற்றாண்டுகள் சோதித்து அறிதல் மற்றும் உறுதிப்படுத்தல் கால அவகாசம் தேவைப்படுகிறது.எனவே தாங்கள் (இளங்காடாள்) இந்தத் தாமதத்தைப் பொறுத்துக்கொள்ள வேண்டும்.

எப்பொழுதும் பெருவாழ்வை முன்னெடுப்போமாக!

எனும்படி வயலி நாட்டுப் பேரரசி நேர்வயலி நேர்த்தியாளின் அரச ஓலை நிறைவுறுகிறது.

இவ்வோலை இளங்காடாள் பெருமனிதியை வந்தடைந்தவுடன் இதற்கு மறுமொழியாயும் மறுப்புமொழியாயும் மத்திய மலைநாட்டு அரசவோலை சேவகி ஊடாய் விரைகிறது.

நேர்வயலி நேர்த்தியாளின் நேரடிக் கரங்களை நெருக்கும் அரசவோலை வழக்காறு கொண்டு அதன் வாதத்தை முன்வைக்கிறது.

பேரரசி நேர்வயலியாளுக்கு இம்மொழி சரியெனத் தோன்றினும் வயலி நாட்டுக்கான கூட்டுப்பொறுப்புமிக்க அரசவைப் பெருமனிதிகள் இதனைப் புறந்தள்ளுகின்றாள்கள்.

பேரரசியாரே ! நாம் பேரரசி நாட்டவள்கள் என்றபோது ஏன் ஒரு சிற்றரசு நாட்டின் அரசவோலைக்குத் தலைவணங்க வேண்டும் என நேர்வயலி நேர்த்தியாளிடம் வினா எழுப்புகிறாள்கள் வயலி நாட்டுப் பெருமனிதிகள்.

## அத்தியாயம் - 12

## வயலிநாட்டுச் சமர்

சிற்றாண்டுகள் பல கடந்து விட்ட பொழுதிலும் நேர்வயலி நேர்த்தியாளின் செயற்பாடு இன்னதென்று விளங்கயில்லை.

மத்திய மலைநாட்டின் சார்பாக போர் அறிவிப்பு ஓலையானது வயலிநாட்டிற்கு விரைகிறது.

அதனையேற்று போர் ஏற்புமொழியும் வயலி நாட்டிடமிருந்து இளங்காடாளுக்கு கிடைக்கப் பெறுகின்றது.

இதனையடுத்து பேரரசி இளங்காடாள் ஆனவள், போர் முன்னெடுப்புகளைத் துவங்கப் பணிக்கிறாள் சேனை முதலியாகிய இளவனவாழியிடம்.

அவ்விதமே முன்னெடுப்பும் முன்னேற்பாடும் முன்னேற்றம் கொள்கின்றது. சேனை முதலியாகிய இளவனவாழி யானவள் ஆனைகளிடமும் ஆனைப்பற்றாளிகளிடமும் தாங்கள்தான் இந்தச் சேனையை முதலில் முன்னெடுக்க வேண்டுமெனப் பணிக்கிறாள். ஆனைகளும் அதற்குச் சமதித்து ஏற்பு முழக்கத்தை பிளிறல் மொழியாய் வழங்குகின்றாள்கள். ஆனைப்பற்றாளிகளும் அதையே வழிமொழிந்து ஏற்கிறாள்கள்.

ஆனைப்படை முன்செல்ல அத்தனை படைகளும் பின்தொடர்கின்றன. ஆனைகளுக்கும் ஆனைப்பற்றாளிகளுக்கும் இடையேயான புரிதல் வயலிநாட்டுப் போரில் பெருந்துணை நிற்கின்றது.

வயலிநாடு தன் பெரும் கவனத்தை சமவெளிப்பரப்பின் மீது கொண்டுள்ளது. ஆகையால் ஆனைகள் போரிற்கு மட்டுமே பயன்படுத்தப்பட்டு பழக்கப்படுத்தப் பட்டுள்ளன. ஆனைகள் குறித்தான பெரும்புரிதல் அம்மனிதிகளுக்கு

அதிஅவசியமானதில்லை.

மத்திய மலைநாட்டு மனிதிகளின் வாழ்வியலே ஆனைதான். ஆனையின் மொழி அவளுக்குப் புரியும். அவளின் மொழி ஆனைக்குத் தெரியும். இவ்விடயம் வலிமைமிக்க ஆனைப்படையின் வலிமையை மேலும் கூட்டியிருக்கின்றது.

மத்திய மலைநாட்டின் ஆற்றல்மிக்க ஆனைகளுக்கு ஈடுகொடுக்க முடியாமல் வயலி நாட்டின் அத்தனை படைகளும் தடுமாற்றங் கொள்கின்றன. வயலி நாட்டுப் போராளி மனிதிகளால் அவதானிக்க இயலாத அளவிற்கு போரின் காட்சிகள் அரங்கேறிக்கொண்டிருக்கின்றன.

பெருத்த உயிர்ச் சேதம் ஏற்பட்டுவிடக்கூடா தென்றெண்ணி மத்திய மலைநாட்டின் ஆனைப்படைகளைப் போரில் இருந்து விலகிக்கொள்ள வேண்டுமெனப் பணிக்கிறாள் அந்நாட்டுச் சேனை முதலியாகிய இளவனவாழி.

இந்தச்  சமரில் வெற்றி வாய்ப்பானது, பேரரசு நாடான வயலி நாட்டிடமிருந்து  மத்திய மலைநாட்டிற்குப் பரிமாற்றங் கொள்கிறது.

பேரரசிகளான நேர்வயலி நேர்த்தியாளும் இளங்காடாளும் நேரடிக் கதைப்பில் (பேச்சாடல்) பங்கு கொள்கின்றாள்கள்.

எவளிடமும் இருமாப்பும் இகழ்வுமின்றி இருவரும் ஒருவளை ஒருவள் நோக்குகிறாள்கள்.
நோக்குதலினூடே நோக்கத்தைப் பரிமாறிக் கொள்கிறாள்கள்.

ஆளுமைப் புரிதல்மிக்க ஈர்அரசிகளுக்கும் நோக்கம்

ஒன்றென்பதால் அந்நோக்கமே நிகழ்வாகிறது.

வயலி நாட்டுப் பேரரசியே !

போரில் வென்றதன் விளைவாய் வயலி நாட்டின் ஆட்சிப்பகுதியைக் கைப்பற்றும் எண்ணம் மத்திய மலைநாட்டுக்கில்லை யெனச் சூளுரைக்கிறாள் இளங்காடாள்.

மறுமொழி நேர்வயலி நேர்த்தியாளுக்குரியது.

பெருநன்றிகள் இளங்காடாளுக்கு,

பாங்காடுகளில் மூங்கில் வேட்டை முறைப்படுத்தப்பட்டு இக்கணம் முதலே கண்காணிப்பு மனிதிகள் இச்சேவையில் ஈடுபடுவாள்கள் என்றுரைக்கிறாள்.

வன உயிர்ப் புரிதலும் பல்லுயிர்ப்பக்குவமும் கொண்டு வாழ்வியலை முன்னெடுக்கிறாள்கள் மனிதிகள்.

"மரபு மீள்-வாழ்வு முனைவோம்

சிறப்புடன் சீர்செய்வோம்"



# ஆனைக்காடு



தேவ சங்கீத்

ஆனைக்காடு




“பேரியற்கை மற்றும் பெருஞ்சூழலியற் நியாயவழிக்கான அரசபொறுப்பாளியை பேரழிவின் விளிம்பில் நின்றுகொண்டிருக்கும் பெருமனிதி கூப்பிடுகிறாள் என்றே அரசகட்டளை சேவகி ஊடாக விரையட்டும்”

₹210